41

# அருணாசல ஜோதி



உ

# அருணாசல ஜோதி

(41)

வேலவன்
எழுதியது

அருள் புத்தகாலயம்
4, தணிகாசலம் செட்டி தெரு
தி. நகர் : : சென்னை-17

உ

ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய !

# அருணாசல ஜோதி

## 1. ஆத்ம தரிசனம்

திருச்சுழி எனப்படும் திருச்சுழியல், மதுரைக்குத் தென் கிழக்கே முப்பது மைல் தொலைவிலுள்ள ஒரு சிவ க்ஷேத்திரம்.

தேவார ஆசிரியர்களால் பாடல் பெற்ற பாண்டிய நாட்டுப் பதினான்கு திருத்தலங்களுள் இதுவும் ஒன்று.

மாணிக்கவாசகரும் தமது திருச்சிற்றம்பலக் கோவை யாரில் இத்தலத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்னர், இவ்வூரில் பராசரகோத்திரத்தைச் சேர்ந்த சுந்தரம் ஐயர் என்ற ஓர் அந்தணப் பெரியார் வாழ்ந்து வந்தார். அவரது இல்லக் கிழத்தியாரின் திருநாமம் அழகம்மையார்.

இவர்களுக்கு நாகசாமி, வேங்கடராமன், நாகசுந்தரம் என்னும் மூன்று புதல்வர்களும், அலர்மேல் மங்கை யென்னும் ஒரு புதல்வியும் பிறந்தனர்.

இவர்களில், இரண்டாவது புதல்வராகிய வேங்கடராமன் தான், பிற்காலத்தில் அருணாசல ஜோதியாக விளங்கி, உலகனைத்தும் ஞான ஒளி பரப்பிக் கொண்டிருந்த பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள் ஆவர்!

## மஹானின் திருஅவதாரம்

கலியுகாதி 4980க்குச் சரியான பிரமாதி வருஷம் மார்கழி மாதம் பதினாறுந்தேதி (30—12—1879) திங்கட்கிழமை, புனர்பூச நக்ஷத்திரத்தில், அன்று உதயாதி 48 நாழிகைக்கு மேல், துலா லக்கினத்தில், மக்கட் சமுதாயம் செய்த புண்ணியத்தின் விளைவாக, யாரோ இனந்தெரியாத ஒரு மஹாத்மா, வேங்கடராமன் என்ற குழந்தையின் வடிவத்திலே, இப் பூவுலகில் திருவவதாரம் செய்தார்.

அவரது ஜாதகத்தின் இராசிச் சக்கரம் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| சனி | செ | | சந் கே |
| வி | இராசி | | மா |
| | | | |
| சூ ரா | சு பு | ல | |

ஜனன காலத்தில், குரு மஹாதசையிலே இருப்பு ஐந்து வருஷம், ஆறுமாதம்.

இதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்தான், வடலூர் ஸ்ரீ இராமலிங்க வள்ளலார் தம் திருவுருக் கரந்தார் என்பது, இங்கே குறிப்பிடத்தக்கது!

## "அருணசலமா! அது எங்கேயிருக்கிறது?"

வேங்கடராமனுக்குப் பன்னிரண்டு வயது ஆகும்போது, அவரது தந்தை சுந்தரம் ஐயர் சிவனடி சேர்ந்துவிட்டார். அது சமயம் வேங்கடராமன் மதுரையிலுள்ள தன் சிறிய தந்தையின் வீட்டிலே தங்கியிருந்து, அமெரிக்கன் மிஷன் ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தார்.

படிப்பில் அவர் அவ்வளவாக அக்கறை காட்டியதாய்த் தெரியவில்லை. எனினும், எதையும் விரைவில் மனப்பாடம் செய்துவிடக்கூடிய நினைவாற்றலும், சிறப்பான மதிநுட்பமும், அவரிடம் அவ்வப்போது தெளிவாக விளங்கி வரலாயின.

நாமெல்லாம் வைகுண்டம், கைலாசம் போன்ற சொற்களைக் கேட்கும்போது, அவை இந்த மனிதப்பிறவியிலே சென்று அடைய முடியாத பெரும் பதங்கள் என்பதான ஓர் உணர்வு நம் உள்ளத்தில் ஏற்படுகிறது அல்லவா? சிறுவன் வேங்கடராமனுக்கு, அருணசலம் என்ற சொல்லைக்கேட்கும் போது, அதே போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டு வந்ததாம்!

இப்படியிருக்கையில், *1895*'ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் வேங்கடராமனது உறவினர் ஒருவர், திருச்சுழியிலிருந்து புறப்பட்டு எங்கேயோ வெளியூர் சென்றுவிட்டு, திரும்பும் வழியில் மதுரைக்கு வந்தாராம்,

வேங்கடராமன் அவரை நோக்கி, "எங்கிருந்து வருகிறீர்?" என்று கேட்டாராம்.

"நான் அருணுசலத்திலிருந்து வருகிறேன்" என்று அவர் பதில் அளித்தாராம்.

இதைக் கேட்டதும், வேங்கடராமனுக்குச் சொல்லொணு வியப்பாகி விட்டது. "அருணுசலத்துக்குக்கூட நம் போன்ற மனிதர்கள் போய்வர முடியுமா?" என்று உள்ளூற ஆச்சர்யம் அடைந்தவராய்,

"அருணுசலமா? அது எங்கே இருக்கிறது?" என்று அவர் ஆவலோடு கேட்டாராம்.

"என்ன அப்பா இது? நீ திருவண்ணுமலையென்று கேள்விப்பட்டதில்லையா? அதுதான் அருணுசலம்!" என்ருராம் அந்த உறவினர்.

உடனே வேங்கடராமனுக்குத் தாங்கொணு மகிழ்ச்சி ஏற்பட்டது. "அப்படியாஞல் நாமும் ஒருநாள் அருணுசலத்தை அடைந்துவிடலாம்!" என்று அவர் உள்ளம் துள்ளியது.

வேங்கடராமனது சிறிய சிந்தையார், பெரியபுராண வசன நூல் ஒன்றை, யாரிடமிருந்தோ இரவல் வாங்கித் தன் வீட்டில் கொண்டு வந்து வைத்திருந்தாராம். அதை எடுத்துப் படித்துப் பார்த்தார் வேங்கடராமன். உடனே அவர் உள்ளத்தில் பக்தி உணர்ச்சியும், மெய்ஞ்ஞான நாட்டமும் மேலிடத் தொடங்கின. மிகவும் ஆர்வத்துடன் அதை முழுதும் படித்து முடித்தார்.

அதுமுதல் அவர் மதுரைச் சொக்கேசன் ஆலயத்திற்குச் சென்று, அங்குள்ள அறுபத்து மூவரை வணங்கி, அவர்களைப் போல் தன்னையும் ஒரு தொண்டஞக ஏற்றுக் கொள்ளுமாறு,

அங்கயற்கண்ணியையும் ஆலவாய் அப்பனையும் அகங் குழைந்து பிரார்த்தித்து வரலானார்.

அவர் இப்படி அடிக்கடி கோயிலுக்குப் போய் வருவதை யும், அவரது சிவபக்தியையும் கண்டு, அவருடைய தமயன் நாகசாமி அவரை "யோகி! ஞானி!" என்றெல்லாம் கேலி செய்வாராம். தம்முடைய அந்தக் கேலிச் சொற்களே நூற்றுக்கு நூறு பலிதமாகப் போகின்றன என்று, பாவம், நாகசாமி தன் கனவிலும் கூட எண்ணியிருக்கமாட்டார்!

தன்னைத்தான் அறிந்த
சின்னஞ்சிறு பிள்ளை!

ஒரு நாள், வேங்கடராமனது வாழ்க்கையில் ஓர் அதிசய நிகழ்ச்சி ஏற்பட்டது.

திடீர் என்று, தான் இறந்து விடப்போவது போன்ற ஒரு பய உணர்ச்சி, அவருள்ளத்தைக் கவ்விப் பற்றியது.

அவருக்கு அப்போது உடலில் எந்த ஒரு நோயும் கிடையாது. நல்ல ஆரோக்கியமான நிலையில், தம்முடைய அறையிலே அவர் தனியாக உட்கார்ந்திருந்தார். தமக்கு ஏன் அம்மாதிரி ஒரு பயம் ஏற்படவேண்டும் என்ற காரண காரியங்களைப் பற்றியே அவர் சிந்தித்துப் பார்க்க வில்லை. அதற்கு பதிலாக, மரணம் வந்து விட்டால் அது எப்படியிருக்கும் என்பதை அனுபவித்துப் பார்க்க அவர் முற்பட்டார்.

தான் மரணம் அடைந்து விட்டதாக எண்ணிக்கொண்டு, தரையில் படுத்துத் தன் உடலை ஒரு பிரேதம்போல் ஆக்கிக் கொண்டார். கண்கள் மூடின. சுவாசம் நின்றது.

புலன்கள் அனைத்தும் வெளியுலகை நோக்கி ஓடாமல், உள்ளொடுங்கி அடங்கின.

தான் இறந்து விட்டாற்போல் எண்ணிக்கொண்டு நடிக்கத் தொடங்கிய ஒரு நடிப்புத்தான் அது. ஆனால், அந்த நடிப்பை அவர் முழுமையாக நடித்தார். வேறு எவராலும் நடிக்க இயலாத அளவு, நூற்றுக்கு நூறு திறமையாக நடித்தார்.

கண்ணை மூடுதல், மூச்சை நிறுத்துதல் போன்ற மற்ற நிகழ்ச்சிகளைக் கூட, எல்லோரும் நடித்து விடலாம். ஆனால், வெளியுலக உணர்வு சிறிதும் இல்லாதபடி, புலன்களை உள்ளுக்கு இழுத்துக் கொள்வது என்பது, அவ்வளவு எளிதான காரியம் அல்ல.

அதைக்கூட ஒரு சிலரால் செய்துவிட முடியும். அதனினும் அரிய காரியம் இன்னொன்றை அவர் செய்தார். அதாவது, உடம்பு அசைவற்றுக் கட்டையாய்க் கிடப்பது போல, அவர் தம்முடைய மனத்தையும் அசைவற்றுக் கட்டையாய்க் கிடக்கச் செய்தார். உடனே அதுவே சமாதி நிலையாக பலித்து விட்டது!

உடல் பிரேதமாய்ப் போனபிறகு, மனத்திலே எண்ணங்கள் எழுவது உண்டா? இல்லையல்லவா? அந்த எண்ணமற்ற நிலையை, உயிரோடு இருக்கும்போதே ஒருவர் தம் உள்ளத்தினால் உண்டாக்கிக் கொள்வாரானால், அதுவே சமாதி என்று சொல்லப்படுவது. அதைத்தான் மஹா மோனம் என்றும் சொல்வார்கள்.

அந்த மஹா மோனத்தையே சிவபெருமான் தக்ஷிணா மூர்த்தியாக இருந்து ஸனகாதி மஹரிஷிகளுக்கு உபதேசித்தார்.

தவவலிமையிலும், வேதசாஸ்திர புராண விற்பத்தியிலும் தன்னிகரற்றவர்களாய் விளங்கிய அந்த ஸனகாதி

முதுபெருங் கிழவர்களுக்கே, பரமசிவன் நேரில்வந்து காட்டிக் கொடுக்க வேண்டியதாய் இருந்த அந்த மோன நிலையை;

பள்ளியிலே பத்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த ஒரு பதினுறு வயதுச் சிறுவன், ஏதோ விளையாட்டுப்போல அடையப் பெற்ருன் என்ருல்;

அவன் தன்னுடைய முற்பிறவியிலே எத்தகைய ஒரு மஹாயோகியாய், மஹாஞானியாய் இருந்திருக்கவேண்டும்!

"நூதன விவேகி உள்ளம் நுழையாது", என்கிருர் கைவல்ய நவநீத ஆசிரியர். அப்படி நுழையுமாகில், அவன் இதற்கு முந்தின கோடிக்கணக்கான பிறவிகளில் ஆற்றிய நிஷ்காம்ய கர்மாக்களின் விளைவு என்றே அதைக் கருத வேண்டுமாம்.

"யானையை அடக்கலாம். புலியின் வாயைக் கட்டலாம். சிங்கத்தின் மீதமர்ந்து சவாரி செய்யலாம். பாம்பைக் கையில் எடுத்து ஆட்டி விளையாடலாம். பஞ்சலோகங்களையும் தங்கமாக மாற்றலாம். பிறர் கண்ணில் படாமல் நம் உடலை மறைத்து உலாவலாம். தேவர்களையும் நமக்குக் குற்றேவல் செய்ய வைக்கலாம். என்றென்றைக்கும் இளமை மாருது இருக்கலாம். கூடுவிட்டுக் கூடு பாயலாம். இவ்வளவும் எளிதான காரியங்களே! ஆனுல், மனத்தை அடக்கிச் சும்மா இருப்பதுதான் அரிதினும் அரிய செயல்!" என்கிருர் தாயுமானவர்.

அத்தகைய ஒரு செயற்கரிய செயலை, எந்த ஒரு குருவினிடத்திலும் பயிலாமல், யாதொரு சாதனையிலும் ஈடுபடாமல், எடுத்த எடுப்பிலேயே செய்து சித்தி கண்ட ஒரு மஹாபுருஷர், பகவான் ஸ்ரீ ரமணரைத் தவிர உலகில் இன்னொருவர் இருந்ததாக நாம் கதைகளில் கூடக் கேட்க

முடியவில்லை. அதனால்தான் பகவானுடைய பக்தர்கள், மக்கட் குலத்தைக் கடைத்தேற்றுவதற்காக மானுட வேடம் தாங்கிக் கால் நிலந்தோயக் காட்சியளித்த பரப்ரஹ்ம ஸ்வரூபமாக, அவரைக் கருதிப் போற்றுகிறார்கள்.

சிறுவன் வேங்கடராமன் தான் இறந்துவிட்டாற்போல் நடித்துப் பார்த்தார். அந்த நடிப்பின் ஓர் அங்கமாக, அவரது உள்ளமானது ஓர் அலையற்ற கடல்போலச் சலன மற்று அடங்கியது. தூங்காமல் தூங்குகிற ஒரு சுக நிலையை அவர் எய்தினார். அந்த நிலையிலே, தம்முடைய தூய ஆத்ம ஸ்வரூபத்தை அவர் தரிசனம் செய்தார்.

சைவர்களால் சிவம் என்றும், சாக்தர்களால் சக்தியென்றும், கௌமாரர்களால் ஸுப்ரஹ்மண்யம் என்றும், வைஷ்ணவர்களால் விஷ்ணு என்றும், வேதாந்திகளால் பிரஹ்மம் என்றும், இப்படிப் பல்வேறு சமயத்தினரால் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுவதும், ஆனால் உண்மையில் இந்த நாமங்கள் (ரூபங்கள்) அனைத்துக்கும் அப்பாற் பட்டதுமான பரம்பொருளே நம் ஒவ்வொருவர் உள்ளேயும் "நான்! நான்!!" என்று குரல் கொடுத்துக் கொண்டிருக்கிற ஆத்ம ஸ்வரூபமாகப் பிரகாசிக்கிறது என்பது, உபநிடதங்களின் சாரமான கருத்து.

சிறுவன் வேங்கடராமன் எந்த ஓர் உபநிடதத்தையும் படித்தவர் அல்ல. ஆனால், அந்த உபநிடதங்களிலே பேசப் படுகிற ஆத்மஸ்வரூபத்தை, அவர் அனுபூதி வாயிலாக அறிந்தார். அதுவே தம்முடைய உண்மையான ஸ்வரூபம் என்று தெளிந்தார்.

சர்க்கரை இனிக்கும் என்பதைப் புத்தகத்தில் படித் திராதவனுக்கும் கூட, சர்க்கரையை வாயில் போட்டவுடன் அதன் இனிப்பு என்னும் இயல்பு புலப்படுகிறது அல்லவா?

அதே போல், ''அயம் ஆத்மா ப்ரஹ்ம'' என்னும் மஹா வாக்கியத்தை உபநிடதங்களில் படித்தறியாவிட்டாலும், ஆத்மாவைத் தனக்குள்ளே அபரோக்ஷமாய் (அதாவது, அனுபவபூர்வமாய்) அறிந்தவுடன், ஆத்மாவே பிரஹ்மம் என்னும் அதன் உண்மையான கடவுள் தன்மை, வேங்கட ராமனுக்கு மிகத் தெளிவாகப் புலப்படலாயிற்று.

அதாவது, ''நானே பிரஹ்மம்'' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்னும் உண்மை, அவருடைய உணர்விலே மலர்ச்சி அடைந்தது. உடனே, அவரைப் பிடித்திருந்த மரண பயம் பளிச்சென்று மறைந்து ஒழிந்தது. ''மரணம் உடலுக்குத் தானே தவிர, ஆத்மாவுக்கு அல்லவே? நான் ஆத்மாவே யன்றி உடல் அல்லவே!'' என்னும் மெய்ஞ்ஞானம், அங்கு இயல்பாகவே ஊற்றெடுத்துப் பெருகியது.

அன்று முதல் அவருக்குத் தம் உடலைப் பற்றிய சிந்தனை கள் ஒழியத் தொடங்கின. ஆத்மாவைப் பற்றிய சிந்தனை களிலும், ஆத்ம அனுபூதியிலுமே அவர் அடிக்கடி திளைத்து வரலானார்.

வீணையில் ஒரு கனராகத்தை இசைக்கும்போது, அந்த ராகத்துக்கு உரிய ஏழு ஸ்வரங்களும் மாறி மாறி வந்து போய்க்கொண்டிருக்கும். ஆனால், அந்த ஏழு ஸ்வரங்களுக்கும் ஆதாரமாக, ஒரேயொரு ஸ்வரம் மட்டும் இடையறாது ஒலித் துக்கொண்டிருக்கும். அதற்குத்தான் ஆதார சுருதி என்று பெயர்.

அதேபோல், சிறுவன் வேங்கடராமனுக்கு, அன்று முதல் உலக விவகாரங்களிலே ஈடுபடும்போது உள்ளத்தில் பல எண் ணங்கள் இயல்பாக எழுந்து மறைந்தபோதிலும், அந்த எண் ணங்கள் அனைத்தினுக்கும் ஓர் ஆதார சுருதிபோன்று, உள் ளூற ஆத்மானுபவம் விளங்கிக்கொண்டிருந்தது.

## தந்தையைத் தேடிப் புறப்படுதல்

இந்த நிலை ஏற்பட்டபிறகு, வேங்கடராமனுக்குக் கல்வியில் கொஞ்ச நஞ்சம் இருந்த அக்கறையும் போய்விட்டது. நண்பர்களிடத்தும் உறவினர்களிடத்தும் கலந்து பழகுவதிலே காணப்படுகிற சுவையும் மறைந்துவிட்டது. யார் எது சொன்னாலும் எதிர்த்துப் பேசாத அமைதியும் அடக்கமும் வளர்ச்சியுற்றன. உள்ளத்திலே கிளர்ந்தெழுகிற தன்முனைப்பு அறவே ஒழிந்து மறைந்தது. அடிக்கொரு தடவை தனிமையில் போய் உட்கார்ந்து, ஆத்மானுபூதியில் திளைத்திருப்பதற்கே அவர் ஆசைப்பட்டார். அத்துடன் மீனாட்சி கோயிலுக்குச் சென்று, அங்குள்ள சிவ சன்னிதி, அம்பிகை சன்னிதி அம்பலவாணர் சன்னிதி, அறுபத்து மூவர் சன்னிதி ஆகியவற்றில் நெடுநேரம் தனிமையில் நின்று, உள்ளம் கனலிடை மெழுகென உருகி உருகிக் கண்ணீர் வடிக்கலானார். அதுகாறும் உடலினிடத்தே அபிமானம் வைத்திருந்த அவருடைய ஆன்மாவானது, அப்பற்றினின்றும் விடுபட்டு, இறைவனைப் போய்ப் பற்றிக்கொள்ளத் துடித்தது. சில சமயங்களில், அறுபத்து மூன்று நாயன்மார்களைப்போல் தன்னையும் ஒரு பக்தனாக்கவேண்டும் என்று அவர் இறைவனைப் பிரார்த்தித்தது உண்டு. ஆனால் பெரும்பாலான நாட்களில், எந்த ஒரு பிரார்த்தனையுமே இல்லாமல், இறைவன் சன்னிதியில் போய் நின்று, அங்கு தன் உள்ளம் உருகுவதும் கண்ணீர் பெருகுவதுமான அனுபவத்தில் நெடுநேரம் திளைத்திருப்பதுவே அவருக்கு வழக்கமாய் இருந்தது.

அவரது இந்த மாறுதலடைந்த நிலையைச் சரிவரப் புரிந்து கொள்ளாத அவருடைய தமயன் நாகசாமி, "பெரியவாள்! யோகீஸ்வரர்!" என்றெல்லாம் அவரைக் கிண்டல் செய்துவந்தார்.

"இப்படிப்பட்டவனுக்கு வீட்டில் என்ன வேலை? காட்டுக்குப் போகிறதுதானே?" என்றுகூட அவர் சொல்லுவது

உண்டாம். மதுரையிலுள்ள சிறிய தந்தையும், அவர் அடிக்கடி கோயிலுக்குப் போவதையும் தியானத்தில் அமர்வதையும் கண்டு, ''இந்தச் சிறுவயதில் இவனுக்கு ஏன் இதெல்லாம்?'' என்று கடிந்துகொள்வாராம். வேங்கடராமனுக்குப் படிப்பிலே கவனம் செல்லாததைக் குறித்து, அவரது ஆசிரியர்களும் சினம் அடைவார்களாம்!

அவர் முதன் முதலாக ஆத்மதரிசனம் பெற்ற ஆறுவார காலத்துக்குப் பிறகு ஒருநாள், அவருடைய ஆங்கில இலக்கணப் பாடம் ஒன்றை மூன்று தடவை எழுதிக்கொண்டு வருமாறு, ஆசிரியர் அவருக்குக் கட்டளையிட்டார்.

அதன்படியே வேங்கடராமன் தன் வீட்டில் உட்கார்ந்து, அப்பாடத்தை இரண்டு தடவை எழுதி முடித்தார். மூன்ருவது தடவை எழுதும்போது, ''இதென்ன வீண்வேலை!'' என்ற வெறுப்பு அவர் உள்ளத்தில் தோன்றியது. உடனே காகிதம், எழுதுகோல், இலக்கணப் புத்தகம் எல்லாவற்றையும் தூக்கி யெறிந்துவிட்டு, அந்த இடத்திலேயே அப்படியே அவர் தியானத்தில் அமர்ந்து விட்டார்!

அவரது இந்தச் செயலைக் கண்ட அண்ணன் நாகசாமிக்கு கோபம் வந்துவிட்டது.

''இப்படியெல்லாம் இருக்கிறவனுக்கு இதெல்லாம் என்னத்துக்கு?'' என்று அவர் சப்தம் போட்டார்.

இதைவிடக் கடுமையான சொற்களை, நாகசாமி இதற்கு முன் எத்தனையோ தடவை கூறியிருக்கிருர். ஆனுல் அப்போதெல்லாம் அந்தச் சொற்கள் வேங்கடராமனது உள்ளத்திலே போய்த் தைக்கவில்லை.

இப்போது அவை தைத்தன. ''அண்ணு சொல்வது உண்மைதானே? ஒரு சாதுவைப் போல் வாழ விரும்புகிறவனுக்கு, வீட்டில் என்ன வேலை?'' என்று எண்ணமிட்டார்

வேங்கடராமன். அப்போதே வீட்டைவிட்டுக் கிளம்பி, தன்னுடைய லட்சிய பூமியாகிய அருணாசலத்துக்குச் செல்லத் திட்டமிட்டார்.

ஆனால் வெளிப்படையாக "நான் திருவண்ணாமலைக்குச் செல்கிறேன்" என்று சொன்னால், வீட்டில் விடுவார்களா? அதற்காக, "இன்று மின்சாரத்தைப் பற்றிய ஒரு சிறப்பு வகுப்பு நடக்கிறது. நான் பள்ளிக்கூடம் போக வேண்டும்" என்று புறப்பட்டார்.

"சரி; அப்படியானால், பெட்டியிலிருந்து ஓர் ஐந்து ரூபாய் எடுத்துக் கொள். போகும் வழியிலே அதை என் கல்லூரிச் சம்பளத்துக்காகக் கட்டி விட்டுச் செல்" என்றார் அண்ணன் நாகசாமி. நாகசாமி அப்போது கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார்.

வேங்கடராமனுக்கு இதுவும் திருவருட்செயலேயென்று தோன்றியது. திருவண்ணாமலை போய்ச் சேர்வதற்கான வழிச் செலவுக்கும், இறைவன் தானாகவே வகை செய்துவிட்டான் என்று அவர் எண்ணினார். அண்ணனுக்காகக் கட்ட வேண்டிய கல்லூரிச் சம்பளம் ஐந்து ரூபாயையும், தன் சிற்றி கொடுக்கப் பெற்றுக் கொண்டார். அவள் அளித்த மதிய உணவையும் அவசர அவசரமாக உண்டு முடித்தார். சென்னை மாகாணத்தின் ஒரு பழைய தேசப்படத்தைப் புரட்டிப் பார்த்தார். அதிலிருந்து, திருவண்ணாமலைக்கு மிகவும் அருகிலுள்ள இரயில் நிலையம் திண்டிவனமே என்று தோன்றியது. விழுப்புரம்—காட்பாடி இரயில் பாதை அமைக்கப்படுவதற்கு முன்பு வரையப்பட்ட தேசப்படம் அது. அந்தப் பாதையில் சென்றால், திருவண்ணாமலையிலேயே இரயிலில் போய் இறங்கலாம் என்பது வேங்கடராமனுக்குத் தெரியாது.

எனவே, திண்டிவனம் வரையில் இரயிலில் போய், அங்கிருந்து திருவண்ணாமலைக்கு நடந்து செல்வது என்று அவர்

திட்டமிட்டார் போலும். திண்டிவனம் போய்ச் சேர்வதற்கு மூன்று ரூபாய் போதும் என அவர் கருதினர். ஆகையால், அண்ணனுடைய கல்லூரிச் சம்பளத்துக்காகச் சிற்றிகொடுத்த ஐந்து ரூபாயில் மூன்று ரூபாயை மட்டும் எடுத்துக் கொண்டு, மீதி இரண்டு ரூபாயை அவர் அப்படியே வைத்துவிட்டார். அத்துடன், அவர் ஒரு கடிதத்தையும் எழுதி வைத்தார்.

என் தகப்பனுரைத் தேடிக் கொண்டு

"நான் ∧ அவருடைய உத்தரவின்படி இவ்விடத்தைவிட்டுக் கிளம்பி விட்டேன். இது நல்ல காரியத்தில்தான் பிரவேசித் திருக்கிறது. ஆகையால் இந்தக் காரியத்திற்கு ஒருவரும் விசனப் பட வேண்டாம். இதைப் பார்ப்பதற்காகப் பணமும் செலவு செய்ய வேண்டாம்.

உன் சம்பளத்தை இன்னும் செலுத்த வில்லை. ரூ. 2 இதோடு கூட இருக்கிறது. } இப்படிக்கு, ...............

இதுதான் அவர் அன்று எழுதி வைத்த அந்தக் கடிதம்.

முதலில் "நான்" என்று தன்மையில் தொடங்கியிருக்கிற அக்கடிதம், இரண்டாம் வாக்கியத்திலேயே "இது" என்று படர்க்கைக்கு மாறி விட்டிருப்பது இங்கே உற்று நோக்கத் தக்கது.

"நான்" என்பது இங்கே உடலைக் குறிக்கும் சொல். அது பழக்க வாசனையால் முதல் வாக்கியத்தில் வந்து விட்டது. ஆனால், "நான் இந்த உடல் அல்லவே? ஆத்மஸ்வரூபனுகிய எனக்கு, உடல் என்பது ஓர் அன்னியமான பொருளா யிற்றே!" என்னும் மெய்யுணர்வு, அப்போதே தலை தூக்கி விட்டது போலும். அதனுல்தான், இரண்டாவது வாக்கியத்தில் அந்த உடலானது "இது" என்னும் படர்க் கைச் சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

மேலும், கடிதத்தின் அடியில், ''வேங்கடராமன்'' என்ற கையெழுத்தும் இல்லை, பாருங்கள்!

வேங்கடராமன் என்பது, உடலுக்கு இட்ட பெயரே தவிர, ஆத்மாவுக்கு இட்ட பெயர் அல்ல. ஆத்மாவுக்குப் பெயரும் கிடையாது, வடிவமும் கிடையாது. அதனால்தான் தன்னை ஆத்மஸ்வரூபமாக உணர்ந்து கொண்டிருந்த அந்த பாலயோகிக்கு, தனக்கு அன்னியமான உடலின் பெயரால் கையெழுத்திடுவதற்கு மனம் வரவில்லையென்று தோன்று கிறது!

பிறர் பெயரால் நாம் கையெழுத்திடுவது, சட்டப்படிக் கும்கூட ஒரு குற்றம்தானே?

இவ்வாறு ஒரு கடிதத்தை எழுதி வைத்துவிட்டு, வீட்டை விட்டுக் கிளம்பி மதுரை இரயில் வண்டி நிலையத்துக்கு விரைந்து சென்றான் வேங்கடராமன்.

இது நிகழ்ந்தது 1896' ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இருபத்தொன்பதாம் தேதி சனிக்கிழமை பகல் 12 மணி.

## 2. அருணாசல யாத்திரை

வழக்கமாகப் பன்னிரண்டு மணிக்கு வரவேண்டிய இரயில் வண்டி, அன்று சற்று தாமதமாகவே வந்தது.

வேங்கடராமன் ரூ. 2—13—0 (அதாவது, இரண்டு ரூபாய், பதின்மூன்று அணு) கொடுத்து, திண்டிவனத்துக்கு ஒரு டிக்கெட்டு வாங்கினார். மீதி மூன்று அணுவைத் துணியில் முடிந்துகொண்டு, வண்டியில் ஏறி உட்கார்ந்தார். சிறிது நேரத்திற்குள் உடலை மறந்தார். உலகத்தை மறந்தார். ஆத்மஸ்வரூபத்தில் லயித்து நின்றார்.

அப்படியே அவர் திண்டிவனம் வரையிலும் சென்றிருப்பார். ஆனால் நல்ல வேளையாக, அந்த வண்டியில் பிரயாணம் செய்துகொண்டிருந்த ஓர் இஸ்லாமிய மௌல்வி, நமது பால யோகியோடு பேச்சுக் கொடுத்து அவரது தியானத்தைக் கலைத்தார்.

திருவண்ணாமலையை அடைவதற்குத் திண்டிவனம் செல்ல வேண்டியதில்லை, அதற்கு முன்னதாகவே விழுப்புரத்தில் இறங்கி வண்டி மாறவேண்டும் என்னும் விஷயம், வேங்கடராமனுக்கு அந்த மௌல்வி கூறத் தெரிய வந்தது.

எனவே விழுப்புரம் வந்ததும் அவர் வண்டியை விட்டு இறங்கினார். அங்கு ஓர் உணவாலயத்தினர் தாமே இலவசமாக அளித்த மதிய உணவை உண்டுவிட்டு, கையிலிருந்த சில்லறைக்கு மாம்பழப்பட்டு வரையில் ஒரு டிக்கெட்டு

வாங்கிக்கொண்டு, மறுபடியும் இரயில் வண்டியில் ஏறி உட்கார்ந்தார்.

மாம்பழப்பட்டை அடைந்ததும், அங்கிருந்து திருவண்ணு மலையை நோக்கி நடந்து செல்லத் தொடங்கினுர். 10 மைல் நடந்த பிறகு, அந்தி மயங்கும் வேளையில் அறையணி நல்லூருக்கு வந்து சேர்ந்தார்.

அங்கு மலைமீது ஒரு கோயில் இருந்தது. அந்தக் கோயி லின் மண்டபத்தில் போய் தியானத்தில் அமர்ந்தார் பால யோகி. அப்போது அவருக்கு ஓர் அதிசயக் காட்சி கிடைத் தது.

அதாவது, அந்தக் கோயில் முழுவதும் ஒரு பேரொளி பரவி நிரம்பியது. அது ஒரு வேளை மூலஸ்தானத்திலிருந்து வரும் ஒளியாக இருக்குமோ என்று எண்ணியவராய், வேங் கடராமன் உள்ளே சென்று பார்த்தார். மூலஸ்தானம் எப் போதும் போல் இருள் சூழ்ந்ததாகவே இருந்தது. அப்போது தான், அது ஒரு ஸ்தூலமான ஒளியல்லவென்பது அவருக்குப் புலப்பட்டிருக்க வேண்டும். சிறிது நேரத்தில், அவர் கண்ட அந்த தெய்விக ஒளி மறைந்து விட்டது. வேங்கடராமன் மறுபடியும் தியானத்தில் அமர்ந்தார்.

மறுநாள் கோகுலாஷ்டமி. முத்துக்கிருஷ்ண பாகவதர் என்னும் ஓர் அந்தணர், அன்று நம் பாலயோகிக்கு உணவளிக் கும் பாக்கியம் பெற்ருர். வேங்கடராமன் அவரிடமே தன் காதில் அணிந்திருந்த தங்கக் கடுக்கன்களை அடகுவைத்து, ரூபாய் நான்கு பெற்றுக் கொண்டார். அடுத்த நாள் காலையில் அங்கிருந்து இரயில் ஏறி, அவர் தன் லட்சிய க்ஷேத்திர மாகிய திருவண்ணுமலை யெனப்படும் அருணுசலத்தை வந்து அடைந்து மகிழ்ந்தார்!

## 3. ஆலய தரிசனம்

அருணாசலம் என்பது, பாரத நாட்டின் மிகப் பழமை யான திருத்தலங்களுள் ஒன்று. திருமால் பன்றியுருவெடுத்து அடியைத் தேடவும், பிரமன் அன்னப்பறவையாகி முடியைத் தேடவும், அவ்விருவராலும் தேடிக் காணொணாத அடிமுடிகளை யுடைய ஒரு மாபெரும் ஜோதிர்லிங்கமாய் சிவபெருமான் விளங்கி நின்றார் என்பது புராண வரலாறு. அந்த ஜோதிர் லிங்கமே இப்போது அண்ணாமலையெனப்படும் அருணாசல மாகக் காட்சியளிக்கிறது.

எட்டுக்கோணங்களாய் அமைந்துள்ள இந்தமலை, இறை வனின் அஷ்டமூர்த்தி வடிவத்தைக் குறிக்கிறது என்றும் சொல்லுவார்கள். கௌதம முனிவர் போன்ற மஹரிஷி களும், உமாதேவியாரும் இந்த ஸ்தலத்தில் வந்து தவமியற்றி யிருக்கிறார்கள். திருப்புகழ் பாடிய அருணகிரி நாதரை முரு கப் பெருமான் ஆட்கொண்ட திருத்தலமும் இதுவேயாகும்.

மனித உடம்பிலே யோகிகளால் அனுபவிக்கப்படுகிற ஆறு ஆதாரச் சக்கரங்கள் உள்ளன என்று சொல்லுவார்கள். மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞை என்பனவே அந்தச் சக்கரங்கள். இவை முறையே பிருதிவி (மண்), தேயு (அனல்), அப்பு (புனல் வாயு (காற்று), ஆகாசம் (வெளி), மனம் என்னும் ஆறுமூலப் பொருள்களின் உறைவிடங்களாம்.

பிண்டம் எனப்படுகிற உடம்பில் இருப்பது போலவே, அண்டம் எனப்படுகிற உலகிலும் இந்த ஆறு ஸ்தானங்கள் உண்டு. அவற்றுள், அக்கினியின் ஸ்தானமாகிய ஸ்வாதிஷ் டானமே அருணாசலத் திருப்பதியாகும். சிவபெருமான் இங்கே திருமாலுக்கும் பிரமனுக்கும் நடுவிலே ஓர் அக்கினிப் பிழம்பாய்க் காட்சியளித்தார் என்னும் புராணச் செய்தி, இந்த இடத்தில் நினைவுகூரத் தக்கது. அந்த நிகழ்ச்சியைக் குறிப்பதாகவே, இங்கு ஆண்டுதோறும் மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகிற திருக்கார்த்திகைத் தீப விழா அமைந் திருக்கிறது.

இந்த மலையிலுள்ள குகைகளிலே, பல பெரியோர்கள் அமர்ந்து அருந்தவம் இயற்றி முக்தியடைந்திருக்கிறார்கள். அவர்களிலே குகை நமச்சிவாயர், விருபாக்ஷ முனிவர், ஈசான ஞானதேசிகர் போன்ற ஒரு சில உலகறிந்த மஹான்களும் உண்டு. அண்மையில் வாழ்ந்திருந்த சேஷாத்ரி ஸ்வாமிகளும், இம்மலையின்கண் வசித்தவரேயாவர். நமது பாலயோகி வேங்கடராமனின் பெருமைகளை உள்ளபடி உணர்ந்து உலகத் துக்கு வெளிப்படுத்தியவர் ஒருவர் உண்டு என்றால், அவர் தான் அந்த சேஷாத்ரி ஸ்வாமிகள்!

துன்முகி வருஷம் ஆவணி மாதம் கிருஷ்ணபக்ஷ நவமி (1896 செப்டம்பர் முதல் தேதி) செவ்வாய்க்கிழமைக் காலை யில், வேங்கடராமன் திருவண்ணாமலை வந்து சேர்ந்தார்.

இரயில் வண்டியை விட்டு இறங்கியதும், தொலைவிலே காட்சியளித்த அடலருணைத் திருக்கோபுரங்கள், அவரது உள்ளத்தைச் சொல்லொணாக் களிப்பில் ஆழ்த்தின.

தாய்ப் பசுவைக் காணச் செல்லும் புனிற்றிளம் கன்றைப் போல, அன்பினாலும் ஆர்வத்தினாலும் உந்தப்பட்டவராய், அவர் நேரே அருணாசலேசனின் ஆலயத்துக்கு விரைந்து சென்றார்.

அவருடைய வருகையை அந்த அருணசலேசனே ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தாற்போன்று, ஆலயத்தின் கதவுகளெல்லாம் திறந்திருந்தன.

எப்போதும் ஜனக்கூட்டம் நிறைந்திருக்கின்ற அந்தக் கோயில், அப்போது யாருமின்றி ஏகாந்தமாயிருந்தது.

முற்காலத்தில் சிவபக்தனுன வல்லாள மாமன்னனுல் கட்டப்பட்ட நான்கு கோபுரங்களையுடைய இரண்டாவது பிராகாரத்தைத் தாண்டி, வேங்கடராமன் நேராகக் கர்ப்ப கிருஹத்தை நோக்கிச் சென்ருர்.

அங்கே, இலிங்க வடிவத்தில் அமர்ந்திருந்த அருணசலேசனைக் கண்டார்!

"என்னை ஆட்கொண்டு ஈர்த்துவந்த அம்மையப்பா!" என்று அவர் உள்ளம் அலறிக் கூவி, அந்த அண்ணுமலையாரின் திருவடிகளிலே அடைக்கலம் புகுந்தது.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் தில்லையம்பலத் திருக்கூத்தனை முதன் முதலாகச் சென்று தரிசித்தபோது அடைந்த ஆனந்த அனுபவத்தை,

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும், சிந்தையே யாகக் குணமொரு மூன்றும் திருந்துசாத்துவிகமே யாக, இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின், வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்!"

என்ற தெய்விகச் செய்யுளால் வர்ணிக்கிருர் சேக்கிழார் பெருமான்.

அதே போன்ற ஒரு பேசற்கரிய பேரானந்த அனுபவத்தை, அன்று அருணாசலேசனின் திருமுன்னர் நின்று அடையப்பெற்றார் வேங்கடராமன்!

அன்று அந்த ஸந்நிதியை விட்டு வெளியே வந்தவர், மூன்று ஆண்டுகளுக்கு அப்புறம்தான் மறுபடியும் அங்கு சென்று ஆண்டவனைத் தரிசித்தார். காரணம், அந்த ஆண்டவனைத் தன்னுடைய ஆத்மஸ்வரூபத்திலேயே அவரால் எப்போதும் தரிசித்துக்கொண்டிருக்க முடிந்தது. அப்படி முடியாதவர்களுக்குத்தானே ஆலய தரிசனம் ஒரு நித்திய கர்மாவாக விதிக்கப்பட்டுள்ளது?

## துணையடிகள்
## தொழுதிருத்தல்

தில்லைக்குச் செல்லவேண்டும், செல்லவேண்டும் என்று ஏங்கிக்கொண்டிருந்தார் திருநாளைப்போவார். கடைசியாக ஒரு நாள் அவர் தில்லைக்கும் சென்றார். எனினும், அவரால் அம்பலவாணரைத் தரிசிக்க இயலவில்லை.

அவரது இயலாமைக்கு இரங்கிய இறைவன், தில்லை வாழந்தணர்களைக் கொண்டு அவருக்கு அனல் மஞ்சனம் ஆட்டுவித்து, ஒரு புனிதத் திருமேனியையும் அளித்தார்.

அந்தத் திருமேனியோடு நந்தனார் ஆலயத்துள் புகுந்தார். அம்பலவாணரைத் தரிசித்தார். பின்னர் அவர் தில்லையிலேயே தங்கியிருந்து, நாள்தோறும் நடராஜப் பெருமானைத் தரிசித்துக்கொண்டிருக்கவில்லை. அதற்கு மாறாக முதல் நாள் தரிசனத்திலேயே அம்பலவாணரோடு கலந்து விட்டார்.

அதேபோன்ற ஓர் அனுபவம்தான் நமது பாலயோகி வேங்கடராமனுக்கும் ஏற்பட்டது.

நந்தனுருக்கும் வேங்கடராமனுக்கும் உள்ள ஒரேயொரு வேறுபாடு என்னவென்றால், நந்தனுருக்கு இறைவன் ஒரு புதுமையான தெய்விகத் திருமேனியை எல்லோரும் காணு மாறு வழங்கினுர். வேங்கடராமனுக்கு அவ்வாறு வழங்க வில்லை. தெய்விகத் திருமேனியாதலால் திருநாளைப்போ வாரின் திருவுருவம் அம்பலத்தாடுவான் திருச்சபையில் திடீரென மறையலாயிற்று. வேங்கடராமனின் பூதவுடல் அப்படி மறைந்துவிடவில்லை.

அந்த ஒன்றைத் தவிர, நந்தனுருக்கும் வேங்கடராம னுக்கும் கிடைத்த அனுபவங்கள், வெவ்வேறனவை யென்று சொல்ல முடியாது.

எப்படியென்றால்,—

அண்டத்திலே இறைவன் ஆனந்தக் கூத்தாடுகிற சிதா காசமே தில்லைப்பதியென்று சொல்லப்படுவது. அந்தத் தில்லைப்பதியிலுள்ள பரம்பொருளோடு நந்தனுர் இனிதே கலந்தார்.

அதேபோல;

பிண்டமாகிய மனித சரீரத்திலே இறைவன் ஆனந்தக் கூத்தாடுகிற சிதாகாசமே இதயக் குகை யென்று சொல்லப் படுவது, அந்த இதயக்குகையிலுள்ள பரம்பொருளோடு இனிதே கலந்தார் வேங்கடராமன்.

நந்தனுர் தம் பூதவுடலை அந்தணர்கள் வளர்த்துக் கொடுத்த ஜட அக்கினியிலே ஹோமம் செய்தார். வேங்கட ராமன் தம் பூதவுடலைத் தாமே வளர்த்துக்கொண்ட ஞான அக்கினியிலே ஹோமம் செய்தார்.

எனவே, பிறர் கண்களுக்குத் தெரியும்படியாகப் புறத்தே நிகழ்ந்த நிகழ்ச்சிகளில்தான் நந்தனுருக்கும் வேங்

கடராமனுக்கும் வேறுபாடு உண்டே தவிர; அகத்தே நிகழ்ந்த ஆத்மாநுபவத்தில் அவ்விருவருக்கும் இடையே எள்ளத்தனை வேறுபாடும் கிடையாது.

இதில் ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால்:

சிற்றம்பலத்திலே திருமேனி மறைவுற்ற திருநாளைப் போவார் அப்புறம் என்ன ஆனார் என்பதை,

"......வந்து அணைந்த திருத்தொண்டர் தம்மை வினை மாசறுத்து, சுந்தரத் தாமரை புரையும் துணையடிகள் தொழுதிருக்க, அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள் புரிந்தார்."

என்று விளக்கிக் கூறுகிறார் சேக்கிழாரடிகள்.

அதாவது, இறைவன், தம்மை வந்தடைந்த திருநாளைப் போவாரின் வினைகளாகிய மாசினைப் போக்கி, தம்முடைய திருவடிகளையே தொழுது கொண்டிருக்குமாறு அவருக்கு அருள் புரிந்தாராம்.

திருநாளைப்போவாருடைய பூதவுடல் நெருப்பினால் அழிக்கப்பட்டு, அவருக்கு இறைவன் அளித்த திவ்ய உடலும் சிற்றம்பலத்தில் மறைந்த பிறகு, வேறு எந்த உடலைக் கொண்டு அவர் இறைவனது திருவடிகளைத் தொழுவது?

இறைவனைத் தொழுவதற்கு, இப்போது எந்த உடலும் கிடையாது நந்தனாருக்கு! ஜீவர்கள் தம்முடைய அபிமானத்துக்குரிய ஓர் உடலைப் பெற்றிருக்கும் வரையில்தான், இறைவனும் அவர்களின்பொருட்டு ஓர் உடல் படைத்தவனாகக் காட்சியளிப்பான். ஜீவர்கள் தம் அபிமான தேஹத்தை (அல்லது தேஹாபிமானத்தை) இழந்துவிட்டார்கள் என்றால், இறைவனும் அவர்களின் பொருட்டு உடலற்றவனாகவே தான் விளங்கிக் கொண்டிருப்பான். அதாவது, ஜீவனும் ஓர் அரு

வப்பொருள், இறைவனும் அருவப்பொருள் என்று ஆகிவிடு கிற நிலை அது.

அந்த நிலையில், இறைவன் தம்முடைய திருவடிகளைத் தொழுது கொண்டிருக்குமாறு நந்தனருக்கு அருளிச் செய்தார் என்றால், ஜீவப்ரஹ்ம ஐக்கியத்தை சாதனை செய்து கொண்டிருக்குமாறு தில்லையம்பலவன் திருநாளைப் போவாருக்கு உபதேசம் செய்தார் என்பதே அதன் உட்பொருளாகும்.

### நந்தனரும் வேங்கடராமனும்

ஜீவனும் பிரஹ்மமும் ஐக்கியமாவதற்குத் தடையாயிருப்பவை, ஜீவனைப்பற்றி நிற்கின்ற வாசனைகளே. அந்த வாசனைகள் முந்தைய வினைகளின் விளைவுகளாகத் தோன்றியவை. ஜீவனிடத்தே வினைகளால் ஏற்பட்ட மாசுகளாகையால், வாசனைகளை வினைமாசு என்று குறிப்பிடுகிறார் சேக்கிழார் பெருமான். "வந்தணைந்த திருத்தொண்டர் தம்மை வினை மாசறுத்து" என்னும் சொற்றொடர் இங்கு சிந்திக்கத் தக்கது.

இறைவனது திருவருளால்தான், ஜீவர்களுக்குப் பிறவிப் பிணியைத் தருகிற வாசனைகள் ஒழிய வேண்டும். அவை அவ்வாறு ஒழியுமாறு நந்தனருக்கு அருள் புரிந்தாராம் அம்பலவாணர்.

ஆனால், "சாதனையின்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை" யென்பது, ஆன்றோர் தம் அனுபவத்தில் கண்டறிந்து கூறிய ஓர் அரும்பெரும் உண்மை. சாதனையில்லாமலே முக்தி சித்தித்துவிடக் கூடும் என்றால், உலகில் உள்ள எல்லா உயிர்களையுமே இறைவன் ஒரே நொடியில் ஜீவன் முக்தர்கள் ஆக்கி விடலாம். ஆனால், குறிப்பிட்ட ஒரு சிலரை மட்டும்தான் அவன் அப்படி ஆக்குகிறானே தவிர, மற்றவர்களை ஆக்குவ

தில்லை. காரணம், அந்த ஒருசிலர் தாம் சாதனையால் பரிபக்கு வப் பட்டவர்கள். மற்றவர்கள் சாதனையற்றவர்கள்; அதனால் பரிபக்குவம் இல்லாதிருப்பவர்கள்.

எனவே, நந்தனாரின் வினைமாசுகளாகிய வாசனைகள் ஒழியுமாறு இறைவனே அருள் புரிந்தாலும், அவற்றைத் தன் சாதனைகளால் ஒழித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு நந்தனாரையே சார்ந்ததாகிறது. நந்தனார் இயற்ற வேண்டிய அந்த சாதனை யாது என்பதையும், இறைவனே அவருக்கு குருவாக இருந்து உபதேசிக்கிறார். ''துணையடிகள் தொழுதிருக்க'' என்பதுதான் அந்த உபதேசம். துணையடிகளைத் தொழுதிருத்தலே ஜீவப்ரஹ்ம ஐக்கிய சாதனையாம் என்பதை, நாம் முன்னமேயே கண்டுள்ளோம்.

திருநாளைப் போவாருக்கு அம்பலவாணர் உபதேசித்த ஜீவப்ரஹ்ம ஐக்கிய சாதனையைத்தான், அன்று நமது வேங்கடராமனுக்கும் அருணாசலேசர் உபதேசித்திருக்க வேண்டும். ஏனென்றால், ஆலயத்திலிருந்து வெளி வந்த பிறகு, வேங்கடராமன் அந்த சாதனையில் தான் ஈடுபடத் தொடங்கினார்.



## 4. அருணுசலேசன் உபதேசம்

ஜீவன் வேறு—பிரஹ்மம் வேறு அல்ல என்பது அத்வைத சித்தாந்தம். ஆனுல், கயிற்றிலே பாம்பு தோன்றுவது போல், பிரஹ்மத்தினிடத்திலே ஜீவத்வம் வெறும் தோற்றமாத்திர மாகக் காட்சியளிக்கிறது. இந்தத் தோற்றம் ஒழியும்போது தான், ஜீவனும் பிரஹ்மமும் ஐக்கியமாகி விட்டதாகக் கூறப்படுகிறது.

ஜீவனுக்குத் தேஹாபிமானம் உண்டு. தேஹாபிமானம் நீங்கிய நிலேயில், ஜீவனே ஆத்மா என்ற பெயரால் குறிப்பிடு வார்கள். அந்த ஆத்மாவே பிரஹ்மம்.

தேஹாபிமானத்தின் காரணமாக, ஜீவனுனது உலகியல் விவகாரங்களில் நாட்டம் கொள்கிறது. அந்த நாட்டம்தான் நாம் கண்ணுறங்கும்போதுகூடக் கனவுகளேத் தோற்றுவிக் கிறது. அவனது வாசனேகளே கனவுகளாகக் காட்சியளிக் கின்றன. அதேவாசனேகள்தாம் நம் விழிப்புக் காலத்தில் மனத்திலே எண்ணங்களாக எழுகின்றன.

கண்ணுறங்கும்போது தோன்றுகிற கனவுகளேக் கட்டுப் படுத்தும் சக்தி நமக்குக் கிடையாது. ஆனுல் விழித்திருக்கும் போது, நாம் முயன்ருல் நமது மனத்திலே எழுகின்ற எண் ணங்களே எழ வொட்டாமலே நம்மால் தடுத்து நிறுத்திவிட முடியும். அந்த சக்தி நமக்கு உண்டு.

அந்த சக்தியைப் பயிற்சியின் மூலம் வளர்த்துக் கொள் வதுதான் உத்தமமான சாதனே.

எண்ணங்களை நமக்கு உள்ளிருந்து கிளப்பி விடுபவை நமது வாசனைகளேயாகையால், எண்ணங்களை எழாமல் தடுக்கும் சாதனையில் நாம் முன்னேற முன்னேற, நம்மைப்பற்றியுள்ள வாசனைகளும் நாளுக்கு நாள் தம் சக்திகளை இழந்து செயலற்றுப் போய்விடும். இதனைத்தான் வாசனாக்ஷயம் என்று சொல்லுவார்கள்.

இப்போதெல்லாம், நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நம் உள்ளத்திலே எந்நேரம் பார்த்தாலும் பல்வேறு வகையான எண்ணங்கள் ஒய்வொழிவில்லாமல் உதித்துக் கொண்டேயிருக்கின்றன அல்லவா?

வாசனாக்ஷயம் ஏற்பட்டு விட்டவர்களுக்கு, அவை அப்படி உதிக்கமாட்டா. அவர்கள் தாமாகவே ஏதேனும் ஒன்றைப் பற்றி எண்ண வேண்டும் அல்லது சிந்திக்க வேண்டும் என்று இச்சைப்பட்டாலன்றி, அவர்கள் உள்ளத்தில் எந்த ஓர் எண்ணமுமே எழமாட்டாது.

எப்படி நம் வாயானது நாம் விரும்பினாலன்றித் தானாகவே பேசமாட்டாதோ, அப்படியே அவர்களுடைய மனமும் அவர்கள் விரும்பினாலன்றித் தானாகவே ஒன்றை எண்ணமாட்டாது. மனம் இவ்வாறு மௌனம் அடைந்துவிடுகிற நிலைக்குத்தான் மனோநாசம் என்று பெயர்.

மனம் மௌனம் அடையும்போது, அந்த மனத்தில் தோன்றும் எண்ணங்களால் அதுகாறும் மறைபட்டுக் கிடந்த ஆத்மாவானது, தானாகவே வெளிப்பட்டு விளங்குகிறது.

சினிமாக் காட்சியின்போது, துணியினாலான ஒரு திரையின் மீதுதானே சலனப் படங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து போய்க் கொண்டிருக்கின்றன? அந்தத் திரையைப் போன்றது ஆத்மா. அதில் தெரியும் நிழல்படங்களைப் போன்றவை நம் எண்ணங்கள்.

திரையின்மீது நிழற்படங்கள் ஓடிக் கொண்டிருக்கும் வரையில், அந்தத் திரையானது நம் கண்ணுக்குத் தெரியாது.

அதேபோல், எண்ணங்கள் நம் மனத்திலே எழுந்து கொண்டிருக்கும் வரையில், நமது உண்மையான ஸ்வரூபமாகிய ஆத்மாவையே நம்மால் உணர முடியாது.

நிழற்படங்கள் ஓடிமுடிந்து நின்று விடுமானுல், அப்போது அந்தத்திரையை மறைப்பதற்கு வேறு எதுவுமே இல்லையாகையால், திரை நம் கண்ணுக்குப் பளிச்சென்று தெரியும்.

அவ்வாறே, நம் மனத்திலே எழுகின்ற எண்ணங்கள் ஓய்ந்து மனம் அடங்கிவிடுமானுல், அப்போது ஆத்மாவை மறைப்பதற்கு வேறு எதுவுமே இல்லையாகையால், அந்த ஆத்மா நம் உணர்வுக்குப் பளிச்சென்று விளங்கத் தொடங்கும். ஆத்மா அவ்வாறு விளங்குகிற நிலைதான், தத்துவ ஞானம் எனப்படுவது.

ஆறுவாரங்களுக்கு முன்னதாக வேங்கடராமன் தான் மரணம் அடைந்துவிட்டாற் போன்று நடித்துப் பார்த்த போது, ஆத்மஸ்வரூபம் அவருக்கு அவ்வாறு தான் அனுபவத்துக்கு வந்தது.

ஆனுல் அந்த அனுபவம் அரைமணி நேரம் தான் நிலைத்திருந்தது. அதற்குமேல் நிலைத்திருக்கவில்லை.

காரணம், அரைமணி நேரத்துக்கு அப்புறம், வாசனைகள் அவரது உள்ளத்தில் எண்ணக் குவியல்களை எழுப்பி விட்டிருக்கவேண்டும். எண்ணங்கள் தலை தூக்கி எழுந்து விட்டால் அவை ஆத்மானுபூதியைத் தடைப்படுத்திக் கலைத்துவிடும்.

## சாதனை நிலையும்
## சித்தி நிலையும்

ஒரு சாதகன் தன்னுடைய ஆத்மானுபூதியில் திளைத்திருக்கும் வரையில், அவனே பிரம்மமாக விளங்குகிறான். ஏனென்றால், ஆத்மா வேறு—பிரம்மம் வேறு அல்ல. ஆனால், எண்ணங்களின் எழுச்சியினால் அந்த ஆத்மானுபூதி கலையுமானால், உடனே அவனுக்கு ஜீவத்துவம் வந்து விடுகிறது. அதாவது, அதற்கு முன் பிரம்மமாக இருந்தவன் அப்போது ஜீவன் ஆகிவிடுகிறான்.

உள்ளத்தில் எழும் எண்ணங்களை ஒழிப்பதன் மூலம் ஒருவன் தன்னுடைய ஜீவத்துவத்தைப் போக்கிக் கொண்டு பிரம்மத்துவத்தை அடைய வேண்டும். அவ்வாறு அடைவதற்குத்தான் ஜீவப்ரம்ம ஐக்கியம் என்று பெயர்.

இந்த ஜீவப்ரம்ம ஐக்கியத்தில் இரண்டு நிலைகள் உண்டு: ஒன்று, சாதனை நிலை; மற்றொன்று, சித்தி நிலை.

நம்முடைய முயற்சியினால் மனத்தை மௌனமாக்கிக் கொண்டு, ஆத்மானுபூதி யெனப்படுகிற பிரம்மானுபவத்தைப் பெறுவது சாதனை நிலை.

நம்முடைய முயற்சியில்லாமல் மனம் இயல்பாகவே மௌனத்தை அடைந்துவிடுவது சித்திநிலை.

முயற்சியினால் அடையப்படுகிற மனோ மௌனம் சிறிது நேரம் தான் நிலைத்திருக்கும். அதற்கப்புறம் முயற்சியில் தளர்ச்சி ஏற்படும்போது அது கலைந்துவிடும்.

முயற்சி சிறிதும் இல்லாமல் இயல்பாகவே சித்தித்து விடுகிற மனோ மௌனம், எப்போதும் நிலைத்திருக்கும். அதை நாமே வேண்டுமென்று கலைத்தாலன்றி, அது ஒரு நாளும் தானாகவே கலையமாட்டாது.

ஆனால், அந்த இயல்பான மனோ மௌனத்தை அடைந்து விடுவது ஓர் எளிதான காரியம் அல்ல. அதற்கு நாம் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். நெடுங்காலம் முயற்சி செய்ய வேண்டும். இடையறாது முயற்சி செய்ய வேண்டும். அப்போதுதான் அது சித்திக்க இயலும்.

இயல்பான மனோ மௌனம் சித்தித்து விடுமானால்-அதுவே ஜீவன்முக்தி யெனப்படுவது. ஜீவன்முக்தி அடைந்தவர்கள் உலகியல் இன்ப துன்பங்களால் எள்ளத்தனையும் பாதிக்கப்படமாட்டார்கள். இந்த உலகியலுக்கு அப்பாற்பட்ட ஓர் ஆனந்த அனுபவத்திலேயே அவர்கள் எப்போதும் திளைத்திருப்பார்கள். அந்த ஆனந்தத்துக்கே ஜீவன் முக்தி, ஆனந்தம் என்று பெயர்.

ஒருவன் தன் வாழ்க்கையில் ஒரேயொரு தடவை சிறிது நேரம் ஆத்மானுபூதியைப் பெற்றுவிட்டால்கூட, அதற்கப்புறம் அவனுக்குப் பிறவியிராது என்று சில தத்துவ நூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், நம்மையும் மீறி நம் மனம் காமம் குரோதம் போன்ற உணர்ச்சிகளுக்கு ஆளாகிக்கொண்டிருக்கும் வரையில், நாம் பிறவிகளிலிருந்து தப்பி விடமுடியும் என்று சொல்லுவதற்கில்லை.

காமம் குரோதம் போன்ற உணர்ச்சிகள், நம் உள்ளத்தில் தாமாகவே எழுகின்ற எண்ணங்களின் விளைவாகத்தான் தோன்றுகின்றன. எனவே, எண்ணங்கள் ஒழிந்த நிலை நம்மிடத்தில் இயல்பாகவே உருவானாலன்றி, நமக்கு மேலும் மேலும் பிறவிகள் வந்து கொண்டுதான் இருக்கும்.

மேற்கொண்டு பிறவிகள் எடுக்காமலிருப்பதற்கான வழிவகைகளை நாம் தேடிக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான், இறைவன் நமக்கு இந்த மனிதப் பிறவியைத் தந்திருக்கிறார். ஆகையால், இந்த பிறவி நமக்கு உண்மையிலேயே

பயனுள்ளதாக அமைய வேண்டுமானுல், நாம் நமது பிறவிப் பிணியை அறவே வேரறுக்கவல்ல (இயல்பான) மனே மௌன நிலையை எப்பாடுபட்டேனும் சித்தி செய்து கொள்ள வேண்டும்.

அது மட்டும் அல்ல. இனிமேல் நாம் பிறவியெடுப்பதோ அல்லது எடுக்காமல் போவதோகூட, இப்போதைக்கு அவ்வளவு முக்கியம் அல்ல. இப்போதைக்கு இந்த உலகில் நாம் துன்பம் இல்லாமல் வாழவேண்டும். பயம் இல்லாமல் வாழவேண்டும். சுதந்தரமாக வாழவேண்டும். கவலையில்லாமல் வாழவேண்டும். நாம் உயிரோடு உள்ளவரையில், அறிவிலே தெளிவோடு, மனத்திலே சாந்தியோடு, புத்தியிலே சுருசுருப்போடு நாம் வாழவேண்டும். அதற்கு வழி என்ன?

அதற்கும் அந்த மனே மௌன நிலையை சித்தி செய்து கொள்வது தான் வழி! அதைத் தவிர வேறு வழியே கிடையாது!

ஆகவே, இகத்துக்கும் பரத்துக்கும் நமக்கு உறுதுணை புரியக்கூடிய ஒரே சாதனை மனே மௌனமேயாகும். அந்த மனே மௌனம்தான் ஜீவப்ரம்ம ஐக்யம் என்ற பெயராலும் பேசப்படுகிறது. உண்மையில், ஜீவப்ரம்மைக்ய சாதனையென்பது மனே மௌன சாதனையைத் தவிர வேறு அல்ல.

## மனம் அடங்க வழி

காட்டிலே தன்னிச்சையாகத் திரிகிற காட்டுமாட்டைப் பிடித்துவந்தால், அது கட்டுக்கு அடங்கமாட்டாது. அதை நாம் சிரமப்பட்டுக் கட்டிப் போட்டாலும், அது கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடும்.

ஆனால், அது அப்படி ஓடிவிட்டாலும் கூட, அதைப் பிடித்து வந்தவன் சும்மா விட்டுவிடமாட்டான். அவன் அதை மறுபடியும் துரத்திப் பிடித்து, தன் வீட்டுக் கட்டுத் தறியில் கொண்டு வந்து கட்டிப் போடுவான்.

இப்படியே அவன் திரும்பத் திரும்பக் கட்டிப்போடுவதும், அது திரும்பத் திரும்ப அறுத்துக் கொண்டு ஓடுவதும், பல நாட்களுக்குத் தொடர்ச்சியாக நடந்துவரும். எனினும், நாளாக ஆக, அந்தக் காட்டுமாடு சிறிது சிறிதாகக் கட்டுக்கு அடங்கிவரும். கடைசியில், கட்டி போடா விட்டால் மட்டுமே ஓடுவது—கட்டிப் போட்டுவிட்டால் அறுத்துக் கொண்டு ஓடுவதில்லையென்ற பரிபக்குவத்தை அது அடையும்.

அப்போதும்கூட, மாட்டுக்காரன் அஜாக்கிரதையாக இருக்க முடியாது. ஏனென்றால், அவன் சிறிது அயர்ந்து மறந்து கட்டிப் போடாமல் விட்டுவிட்டால், அது மறுபடியும் காட்டை நோக்கி ஓடத் தொடங்குமே?

ஆகையால், அவன் மிகவும்விழிப்புணர்ச்சியுடன் அதைத் தவறாமல் கட்டிப் போட்டுக் கண்காணித்து வருவான். அப்படிப் பல காலம் கட்டுப்பட்டுப் பழகினால், அந்தக் காட்டு மாடு பரிபூர்ணமாக சாந்தம் அடைந்துவிடும். அதாவது, அவன் அதைக் கட்டாமல் விட்டுவிட்டால்கூட, அது கட்டிப் போட்ட மாதிரியே தன் கட்டுத் தறியருகில் சும்மா படுத்திருக்கும். மாட்டுக்காரன் வந்து அதைத் தட்டி எழுப்பி வேறோர் இடத்துக்கு அழைத்துச் சென்றால் ஒழிய, அது அந்தக் கட்டுத்தறியை விட்டு அசையமாட்டாது!

அந்தக் காட்டுமாட்டைப் போன்றது மனித உள்ளம். அது நம் கட்டுக்கு அடங்காமல் ஓடிக்கொண்டேயிருக்கும். அது அவ்வாறு தன்னிச்சைப்படி ஓடித்திரியும் வரையில், இம்மையிலும் நாம் சுகம் அடைய முடியாது. மறுமையிலும்

நாம் நலம் அடைய இயலாது. இம்மை, மறுமை இரண்டிலும் நாம் இனிதே வாழ விரும்பினுல், முதலில் மனம் என்னும் அந்தக் காட்டு மாட்டை நாம் கட்டுக்குள் கொண்டு வரவேண்டும்.

நாம் வழிபடுகின்ற தெய்வத்தின் திருவுருவம், நாம் ஜெபிக்கின்ற மந்திரத்தின் எழுத்தோசை இவையெல்லாம், மனம் என்ற மாட்டைக் கட்டிப்போடுவதற்கான கட்டுத்தறிகளாகும். நமக்குப் பிரியமான ஏதேனும் ஒரு தெய்வத்தின் உருவத்திலோ, அல்லது மந்திரத்தின் ஓசையிலோ நாம் கருத்தூன்றி நிற்கப் பழகுவோமானுல், நாளடைவில் நம் மனமானது சிறிது சிறிதாகக் கட்டுக்கு உள்பட்டு வரும். அதாவது, புதிதாகப் பிடித்து வந்த காட்டுமாட்டைப் போல் அது உலகியல் என்னும் காட்டை நோக்கி ஓடியாடி அலையாமல், பல நாள் பழக்கப்பட்ட பசுவைப்போல அது ஒரு தெய்வத்தின் உருவத்திலோ அல்லது மந்திரத்தின் ஓசையிலோ கட்டுப்பட்டு நிற்கும்.

நமது பாலயோகி வேங்கடராமன் எந்த ஒரு தெய்வ வடிவத்தையும் தன் தியானத்துக்கு உரிய பொருளாகப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. எந்த ஒரு மந்திரத்தையும் அவர் ஜெபித்துப் பழகவில்லை. தெய்வம், மந்திரம் இவ்விரண்டையும் கடந்த ஆத்மஸ்வரூபத்தையே, தன் மனத்தைக் கட்டி வைப்பதற்குரிய கட்டுத்தறியாக அவர் பயன்படுத்திக் கொண்டார்.

ஆம். ஆத்மஸ்வரூபத்தைச் சிறிது நேரமேனும் தமக்குள்ளே அனுபவித்துப் பார்க்க முடியாதவர்களுக்காகத்தான், தேவதைகளின் வழிபாடும் மந்திரங்களின் உபாசனையும் விதிக்கப்பட்டுள்ளன என்பது, வேதாந்த நூல்களின் கருத்து. ஆத்மஸ்வரூபத்தை ஒருமுறை சற்று அனுபவித்துப் பார்த்துவிட்டவர்களுக்கு, தேவதைகளின் ரூபத்யானமோ அல்லது மந்திரஜபமோ தேவையில்லை.

## பால யோகியின்
## சாதனை

ரூபத்யானத்தின் மூலம், அல்லது மந்திரத்யானத்தின் மூலம் மனத்தை ஒரு முகப்படுத்துவதுகூட, அந்த மனம் இறுதியாக ஆத்மஸ்வரூபத்தில் போய் அடங்கவேண்டும் என்பதற்காகத்தானே தவிர, வேறல்ல. பாலயோகி வேங்கட ராமனுக்கு, ரூபம், மந்திரம் போன்ற எந்த ஓர் உபகரணத்தின் உதவியும் இல்லாமலே, அவருடைய மனமானது எடுத்த எடுப்பிலேயே ஆத்மஸ்வரூபத்தில் போய் அடங்கி நின்றது. அதற்குக் காரணம், அவர் தமது முற்பிறவிகளில் செய்த மஹத்தான உபாசனைகள் என்றே சொல்லவேண்டும். அந்த முற்பிறவிகளில் விட்ட குறையானது, அவரது இப்பிறவியில் வந்து நிறைவேறியிருக்கிறது.

உண்மையான ஆத்மானுபவத்துக்குள்ள ஒரு தனிப் பெருஞ் சிறப்பு என்னவென்றால்;

அந்த அனுபவம் ஒரேயொருமுறை மட்டுமே ஏற்பட்டதாயிருந்தாலும், அதிலும் சிறிது நேரமே ஏற்பட்டதாயிருந்தாலும், பிற்பாடு எந்தக் காலத்திலும் அது மறந்து போக மாட்டாது.

ஒருமுறை அதை அனுபவித்துப் பார்த்தவன், சிறிது முயன்றால் பிற்பாடு எந்தச் சமயத்திலும் அதே அனுபவத்தைப் பெற்றுவிட முடியும். எனினும், ஆத்ம நாட்டம் கொண்ட உத்தமர்கள், அது மறந்துபோகாதபடி அடிக்கடி சாதனையில் ஈடுபடுவார்கள். அந்த சாதனையின் முடிவிலேயே சித்தி யெனப்படுகிற (நிலையான) ஜீவப்ரஹ்ம ஐக்யம் ஏற்படுகிறது.

அந்த நிலையான ஜீவப்ரஹ்ம ஐக்கியத்தை நந்தனுருக்கு அருளும் பொருட்டே, அவரைத் ' துணையடிகள் தொழுதிருக்குமாறு" பணித்தார் சிவபெருமான்.

துணையடிகள் தொழுதிருத்தல் எனப்படுவது, மனோ மௌன சாதனையேயன்றி வேறல்ல என்பதை, நாம் ஏற்கெனவே கண்டுள்ளோம். நந்தனுருக்குத் தில்லைக்கூத்தன் உபதேசித்த அதே மனோமௌன சாதனையைத்தான், நமது வேங்கடராமனுக்கு அருணாசலேசன் உள்நின்று உபதேசித்திருக்க வேண்டும். ஏனென்றால், ஆத்மஸ்வரூபத்தை ஒரு முறை தமக்குள்ளே அனுபவித்துப் பார்த்தவர்களுக்கு, அந்த அனுபவமானது மனத்தின் சலனங்களால் இடையறுந்து விடாதபடி, அது எக்காலத்தும் எவ்வித முயற்சியும் இன்றி இயல்பாகவே நிலைத்திருக்கும் வண்ணம் மனோ மௌன சாதனையின் மூலம் அதை உறுதிப்படுத்திக்கொள்வதைத் தவிர, வேறு செய்யத்தக்கது எதுவுமே இல்லை. அருணாசலேசன் சந்நிதியிலிருந்து வெளியே வந்த வேங்கடராமனும், உடனடியாக அந்த மனோமௌன சாதனையைத்தான் மிகத் தீவிரமாக மேற்கொள்ளலானார்.

## 5. சமாதியின் சொரூபம்

இலிங்கவடிவில் உள்ள சிவபெருமான், நம்மோடு வாய் திறந்து பேசுவதில்லை. ஆனால், பக்குவ ஆன்மாக்களுக்கு, அவர்களது உள்ளத்தின் உள்ளே நின்று பேசுகிறார். ஸனகாதி முனிவர்களுக்கு, தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் அவர் அப்படித்தான் உபதேசித்தார். ''என்னைப் போல் நீங்களும் மௌனமாய் இருங்கள்'' என்பதே அந்த உபதேசம். அதே உபதேசத்தைத்தான் அருணாசலேசனும் வேங்கடராமனுக்கு அருளிச் செய்தார்.

ஆலயத்திலுள்ள சிவலிங்கம் நம்மோடு பேசாமல் இருப்பதற்கு இதுதான் பொருள். அதாவது, நாமெல்லாம் எப்படி மௌனமாக இருக்க வேண்டும் என்பதை, அது தானே மௌனமாக இருந்து காட்டுகிறது. ஆனால் நாம் அதைப் புரிந்து கொள்வதில்லை. அந்தக் காலத்தில் ஸனகாதி முனிவர்கள் இறைவனுடைய மௌன உபதேசத்தைப் புரிந்துகொண்டார்கள். அதேபோல் இந்தக் காலத்தில் வேங்கடராமன் புரிந்து கொண்டார். புரிந்து கொண்டு, அங்குள்ள ஆயிரக் கால் மண்டபத்தில் வந்து வெறும் கோவணத்தோடு அருந் தவத்தில் அமர்ந்து விட்டார்.

இவ்வாறு தவத்தில் அமர்ந்த 11 ஆண்டுகளுக்குப் பிறகுதான், பகவான் ரமண மஹரிஷிகள் என்னும் திருப்பெயரால் அந்த பாலயோகி அழைக்கப்படலானார். இந்த அற்புதமான பெயரால் அவரை முதன் முதலில் அழைத்த பெருமை, 'புலவர் ஏறு'' என்று போற்றத் தகுந்த மஹாஉபாஸகராகிய

காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள் என்னும் பெரியாரையே சார்ந்ததாகும். அவரைக் கணபதி முனிவர் என்றும் சொல்லு வார்கள். அந்தப் பெருமான் சூட்டிய பெயராலேயே, இனி மேல் நாமும் நமது பாலயோகியைப் பேசுவோமாக!

பகவான் ரமணமஹரிஷிகளைப் பற்றி, ஆங்கிலத்திலும் தமிழிலும் இதுவரையில் பல நூல்கள் வெளி வந்துள்ளன. அருணசலேசன்சந்நிதியிலிருந்துஅவர்வெளியேவந்ததிலிருந்து, கடைசியாக அவர் உலகறிய விதேஹ கைவல்யம் எய்திய வரையில் நிகழ்ந்த நூற்றுக் கணக்கான சம்பவங்கள், அந் நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றையெல் லாம் மீண்டும் ஒருமுறை இச்சிறு நூலிலும் நாம் விவரித் துக் கொண்டிருக்க வேண்டுவது இல்லை. ஆகையால், பக வானது புறவுலக வாழ்க்கையைப் பற்றிய செய்திகளைக் கூடு மான வரையில் சுருக்கமாக முடித்துக் கொண்டு, அவருடைய அகவுலக வாழ்க்கையையும் அறிவுரைகளையுமே நாம் சற்று விரிவாக ஆராய்வோமாக!

முதலில் ஆயிரக்கால் மண்டபத்திலும், பின்னர் அருகி லுள்ள பாதாளக் கோயிலிலும் பகவான் நெடுங்காலம் தவ மிருந்தார். அவர் பாதாளலிங்கத்தின் மறைவில் சென்று தவ மிருக்கும் போதுதான், மஹான் சேஷாத்திரி ஸ்வாமிகள் அவரை வெளியுலகினருக்குக் காண்பித்தருளினர்.

சேஷாத்ரி ஸ்வாமிகளின் பெருமைகளை வர்ணிப்பதென் ருல், அவரைப் போன்ற இன்னொரு மஹானுல் கூட இயலா தென்றே சொல்ல வேண்டும். ஏனென்ருல், அவை சொல் லுக்கு அடங்காதவை. அனுபூதியால் மட்டுமே உணர்ந்து கொள்ளத்தக்கவை.

திருவண்ணுமலையிலுள்ள அறிவுடைப் பெருமக்கள் அனைவரும், அவரைத் தம் கண்முன் நடமாடும் கடவுள் சொரூபமாகவே கருதி வழிபட்டனர். ஆகையால், அவரே நமது பாலயோகி ரமணரை ஒரு மஹா புருஷர் என்று சுட்டிக் காட்டியவுடன், அந்த பாலயோகியின்பால் மக்களுக்கு ஒரு மஹத்தான உயர் மதிப்பு உண்டாயிற்று.

## தேக உணர்வும் அற்றநிலை

அதற்கு ஏற்றவாறு அவர்கள் அந்த பாதாள லிங்கத்துக்குப் பின்னால் ஒரு குழியிலே சமாதி கொண்டிருந்த ரமண பகவானைப் போய்ப் பார்த்த போது, அவர்கள் கண்ட காட்சி அவர்களுடைய உயர்மதிப்பைப் பெரிதும் உறுதிப்படுத்துவதாய் இருந்தது. அதாவது, அவரது அடித் துடையில் எறும்பும் கொசுவும் தேள் போன்ற பல விஷஜந்துக்களும் கடித்து, அந்தப் புண்களிலிருந்து நீரும் சீழும் வடிந்து கொண்டிருந்தனவாம். அவரது உடலையே அரித்துத் தின்னும் அளவுக்கு, அங்கு விஷப் பூச்சிகள் மலிந்திருந்தனவாம். அவரைக் குட்டிய பலதேள்கள் அங்கேயே செத்துக்கிடந்தனவாம். பிற்பாடு பார்க்கும்போது, பல தேள் கொடுக்குகள் அவருடைய துடையிலேயே முறிந்துபோய்க் காணப்பட்டனவாம். இத்தகைய நிலையிலும் பகவான் தன் சமாதி கலையாமல் ஸ்வாத்மானுபூதியில் மூழ்கியிருந்தது, அவ்வூர்ப் பெருமக்களுக்கு அளப்பரிய வியப்பை அளித்தது.

அந்த சமாதி நிலையிலேயே அவர்கள் அவரை அங்கிருந்து கோபுரம் சுப்ரமணியர் ஆலயத்துக்குத் தூக்கிச் சென்றனர்.

நாம் ஆழ்ந்த உறக்கத்திலிருக்கும் போதுகூட, ஒரு சின்னஞ் சிறு சிற்றெறும்பு கடித்தாலுமே நம் உறக்கம் கலைந்து விடுகிறது. அப்படியிருக்க, தேளும் பாம்பும் பூரானும் நட்டுத் தெறுக்காலும் சேர்ந்து கடித்த நிலையிலும், அதைப்

பற்றிய உணர்வே சிறிதுமில்லாமல் ஒருவரால் சமாதியில் இருக்க முடிகிறதென்றால், அந்தச் சமாதியின் சொரூபம் எத்தகையது என்பதை இங்கு நாம் சற்று சிந்திக்க வேண்டும்.

நம்முடைய தேஹம் என்பது, நாம் காணும் இந்த உலகத்தின் ஒரு பகுதியே தவிர வேறல்ல. தேஹத்திலுள்ள மெய் வாய் கண் மூக்கு செவியென்னும் ஐம்புலன்களின் வாயிலாகத்தான், நாம் உலகத்தை அறிகிறோம். உறக்க காலத்தில் இந்தப் புலன்கள் ஐந்தும் ஒடுங்கி விடுகின்றன. ஆகையால் அப்போது உலகமே அறியப்படாததாய் ஆகிவிடுகிறது.

எனினும், புலன்களின் வாயிலாக நாம் ஏற்கெனவே பெற்றுள்ள சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் உலகியல் அனுபவங்கள், நெடுங்காலமாக நம் உள்ளத்தில்போய் வாசனைகளாகப் படிந்துள்ளன அல்லவா? அந்த வாசனைகள், நாம் கண்ணயர்ந்தவுடன் கனவுகளாகக் காட்சியளிக்கின்றன. எனவே, அந்தக் காட்சிகளின் வாயிலாக, புலன்கள் ஒடுங்கிய நிலையிலும் கூட உலகம் நம்மால் அனுபவிக்கப் படுவதாய் இருக்கிறது.

தேஹம் என்பது உலகத்தின் ஒரு பகுதியே யாதலால், உலகானுபவம் உள்ள வரையில் நமக்குத் தேஹானுபவமும் இருந்து கொண்டேயிருக்கும். என்றைக்கு உலகானுபவம் இல்லாமல் போகிறதோ, அன்றைக்குத்தான் தேஹானுபவமும் நமக்கு இல்லாமல் போகும்.

நாம் கண்ணயர்ந்தவுடன் கனவுகளாகக் காட்சியளிக்கின்ற உலகவாசனைகளே, நாம் விழித்திருக்கும்போது நம் உள்ளத்தில் எண்ணங்களாக எழுகின்றன. நாம் தூங்கும்போது நம் கனவுகள் மறைந்து விட்டால், அதனையே சுஷுப்தி அல்லது ஆழ்ந்த உறக்கம் என்று சொல்லுகிறோம். நாம் தூங்காமல் விழிப்புணர்வோடு இருக்கும்போதே நம் மனம் அடங்கி எண்ணங்கள் மறைந்து விட்டால், அதனையே சமாதி என்று சொல்லுகிறோம்.

இந்த சமாதியில் இரண்டு வகைகள் இருக்கின்றன: ஒன்று, நிர்விகல்ப சமாதி: மற்ருென்று, சஹஜசமாதி.

உறக்க காலத்தில் எப்படியோ, அப்படியே ஐம்புலன்களும் ஒடுங்கிவிட்ட நிலையில் அடையப்படுகிற சமாதிக்கு, நிர்விகல்ப சமாதி யென்று பெயர்.

விழிப்புக் காலத்தில் எப்படியோ, அப்படியே ஐம்புலன்களும் ஒடுங்காமல் இயங்கிக் கொண்டிருக்கும் போது, மனம் மட்டும் அறவே அடங்கிவிட்ட நிலையில் அடையப் படுகிற சமாதிக்கு, சஹஜ சமாதி யென்று பெயர்.

## மரணம் எப்போது வெல்லப்படுகிறது?

சஹஜ சமாதியில் எண்ணமற்று இருக்கும் மனத்திற்கு நாமாகவே ஒரு வேலையைக் கொடுத்து, அதனை ஏதேனும் ஒரு சிந்தனையில் ஈடுபடுத்துவதாக வைத்துக் கொள்வோம். அப்போதும்கூட, அந்தச் சிந்தனையினுல் எழுப்பப்படுகிற எண்ணங்கள், நம் உள்ளத்தில் சோகம், மோஹம், பயம் போன்ற எந்த ஓர் உணர்ச்சியையுமே தோற்றுவிக்க மாட்டா. எண்ணங்கள் தோன்றினுலும் அவற்றின் விளைவாக மனத்தில் எதிருணர்ச்சிகள் (Reactions) எழாத நிலையே ஸ்திதப்ரக்ஞநிலை யென்று சொல்லப்படுகிறது. பகவத்கீதையில் இந்த ஸ்திதப்ரக்ஞ நிலை மிகவும் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும், இந்த ஸ்திதப்ரக்ஞ நிலையை அடைவதனையே தம் வாழ்வின் தலையாய குறிக்கோளாய்க் கொள்ள வேண்டும். ஏனென்ருல், ஒருவன் அந்த நிலையை அடைந்து விட்டால், அப்புறம் இந்த உலகியலில்

காணப்படுகிற எந்த ஒரு துன்பமுமே அவனை அணுக மாட்டாது. மரணம் கூட, அவன் தானாக விரும்பும் வரையில் அவனை நெருங்க மாட்டாது. எனவே, அவன் மரணத்தையும் வென்றவன் ஆகி விடுகிறான்! அது மட்டும் அல்ல; மரணத்தை அடையும் முன்னமேயே, சிவலோகம் என்றும், வைகுண்டம் என்றும், கோலோகம் என்றும், ஸ்ரீநகரம் என்றும் இப்படிப் பல்வேறு பெயர்களால் பேசப்படுகிற மேலான பதத்தை, அவன் இவ்வுலகிலேயே இப்போதே எய்திவிட்டவனாய் இன்புற்று வாழ்கிறான். அதாவது, இந்த சரீரத்துடனிருக்கும் போதே, இஹம் பரம் என்னும் இரு துறைகளிலும் அவன் ஓர் இணையற்ற பெரு நிலையைஅடைந்து விளங்குகிறான். ஆகையால், உலகில் பிறவியெடுத்த ஒவ்வொருவனும், தன்னை விரைவில் ஒரு ஸ்திதப்ரக்ஞன் ஆக்கிக் கொள்வதற்கே அல்லும் பகலும் அயராது பாடுபட வேண்டும். அதைக் காட்டிலும் முக்கியமான கடமையோ, அல்லது அவசரமான காரியமோ, அவனுக்கு வேறு எதுவுமே இருக்க முடியாது.

ஆனால், அந்த ஸ்திதப்ரக்ஞ நிலையானது, எவருக்குமே எடுத்த எடுப்பில் சித்தித்துவிட மாட்டாது. அது சித்திக்க வேண்டுமாயின், அதற்கு முன்னதாக ஸஹஜஸமாதி சித்தித்திருக்க வேண்டும்.

மனத்தில் எண்ணங்கள் தோன்றினாலும், அந்த எண்ணங்களின் விளைவாகக் காமக்ரோத லோப மோஹ மத மாத்சர்யங்களாகிய எதிருணர்ச்சிகள் தோன்றாதிருப்பதே ஸ்திதப்ரக்ஞ நிலையென்றால், மனத்தில் எண்ணங்களே தோன்றாமலிருப்பதுதான் ஸஹஜஸமாதி. எனவே, ஸஹஜஸமாதியில் நாம் வெறுமே உலகத்தைப் பார்த்துக்கொண்டு மௌனமாய் உட்கார்ந்திருக்கலாமே தவிர, பிறரோடு நாம் கலந்து பழக முடியாது. ஸ்திதப்ரக்ஞ நிலையில்தான், பிறரோடு நாம் கலந்து பழக முடியும்.

ரமண பகவான் தம் வாழ்வில் பெரும் பகுதியைப் பிற ரோடு கலந்து பழகுவதிலேயே செலவிட்டிருக்கிருர். நாமும் தான் எல்லாரோடும் கலந்து பழகுகிறேம். ஆனல் அவர் பழகியதற்கும் நாம் பழகுவதற்கும் ஓர் அடிப்படை வேறு பாடு உண்டு. அதாவது, நாம் ராகத்வேஷங்களோடு (அதாவது, விருப்பு வெறுப்புக்களோடு) பிறருடன் கலந்து பழகுகிறேம். அவர் எவரிடத்தும் எள்ளத்தனை விருப்போ வெறுப்போ கொள்ளாதவராய்க் கலந்து பழகினர். ஸ்திதப் ரக்ஞன் ஒருவனுல்தான் அப்படிப் பழக முடியும்.

இத்தகைய ஸ்திதப்ரக்ஞ நிலையை அடைவதற்கு முன் னல், அவர் நெடுங்காலம் எவருடனும் பேசாமலும் பழகாம லும் மௌனமாகவே இருந்து வந்தார் என்பது, இங்கு நினைவு கூரத் தக்கது.

எல்லோரும் அவரை வந்து பார்ப்பார்கள். வணங்கு வார்கள். அவரும் மற்றவர்களைப் பார்ப்பார். அங்கும் இங்கும் சிறிது நடமாடுவார். அவ்வப்போது கொஞ்சம் உணவருந்துவார். இன்னும் இவை போன்ற பல சிறு சிறு காரியங்களைச் செய்து கொண்டிருப்பார். ஆனல் பேசமாட் டார். ஒரு சில சமயங்களில் பேசியே தீரவேண்டிய அவசி யம் ஏற்பட்டால் கூட, மிகமிகச் சுருக்கமாகவே பேசுவார்: அல்லது எழுதிக் காட்டுவார். அவர் அப்படி இருந்த நிலைக் குத்தான் ஸஹஜஸமாதியென்று பெயர்.

இந்த ஸஹஜஸமாதியை அடைவதற்கு முன்னதாக, அவர் நெடுங்காலம் நிர்விகல்பஸமாதியில் இருந்தார். அதா வது, ஸஹஜஸமாதியென்னும் சித்தியை அடைவதற்கு, நிர்விகல்பஸமாதியை அவர் ஒரு ஸாதனமாகக் கைக் கொண்டார். அந்த நிர்விகல்பஸமாதி நிலையில்தான், திருவண்ணமலைப் பெருமக்கள் அவரைப் பாதாளக் கோயிலி னுள்ளே கண்டுபிடித்தனர்.

புலன்கள் அனைத்தும் மனத்தில் ஒடுங்க, மனம் ஆத்மாவில் ஒடுங்கியிருப்பதே நிர்விகல்பஸமாதி. புலன்கள் ஒடுங்கி விட்டமையால், அப்போது இந்த உலகமோ, உலகத்தின் ஒரு பகுதியாகிய தேஹமோ, அனுபவிக்கப்படுவதாய் இராது. மனம் ஒடுங்கி விட்டமையால், அப்போது இந்த உலகத்தைப் பற்றியோ, தேஹத்தைப் பற்றியோ, எந்த ஓர் எண்ணமும் எழமாட்டாது. எனவே, நிர்விகல்பஸமாதியின் போது, உடலைப்பற்றிய உணர்வோ சிந்தனையோ ஒரு சிறிதும் இல்லாமல் போய் விடுகிறது.

### மூலப்ரகிருதியின்
### இருவகை சக்திகள்

உடலைப் பற்றிய சிந்தனையில்லாமையால், அதைப் பாது காத்துக் கொள்வதற்கு என்ன என்ன முன்னேற்பாடுகளைச் செய்து கொள்ளலாம் என்பது போன்ற எண்ணங்களே எழுவதில்லை.

உடலைப் பற்றிய உணர்வே இல்லாமையால், அப்போது பசி தாகங்கள் தோன்றுவதில்லை. களைப்பும் இளைப்பும் புலப் படுவதில்லை. அயர்வு அறியப்படாததால், உறக்கம் வந்து அமுக்குவதில்லை. என்றும் அயராத விழிப்புநிலையிலிருக்கும் ஆத்மா ஒன்றுதான் அப்போது உணரப்படுகிறது.

ஆத்ம உணர்வு எந்த அளவுக்கு உறுதிப்பட்டு விளங்கு கிறதோ, அந்த அளவுக்கு உடலுணர்வு ஒழிந்து போய்விடும். உடலுணர்வு ஒழிந்துவிட்ட நிலையில், அந்த உடலைத் தேள் குட்டினால் என்ன? பாம்பு கடித்தால் என்ன?

ஆழ்ந்த உறக்கத்திலும், மூர்ச்சையுற்ற நிலையிலும், நமக்கு உடலுணர்வு இருப்பதில்லை. காரணம், அப்போது

நம் புலன்கள் அனைத்தும் மனத்தில் ஒடுங்க, மனம் போய் மூலப்ரகிருதி யெனப்படுகிற ஒரு பேரிருளில் மூழ்கி விடுகிறது. அப்பேரிருளில் மூழ்கிய உயிருக்குத் தன்னைப் பற்றிய உணர்வும் இராது. தன் உடலைப் பற்றிய உணர்வும் இராது. இந்த உலகத்தைப் பற்றிய உணர்வும் இராது.

மருத்துவர்கள் அறுவைச் சிகிச்சையின் பொருட்டு நோயாளிக்கு மயக்க மருந்து கொடுக்கிறார்கள் அல்லவா? அப்போதும் அதே நிலைதான் ஏற்படுகிறது. அதாவது, மனம்போய் மூலப்ரகிருதியில் மூழ்கிவிடுகிறது. அதனால் தான் கத்தியால் அறுத்துக் கிழித்தாலும் நோயாளி அதை உணராதவனாய் மயங்கிக் கிடக்கிறான்.

கேவலம், மயக்க மருந்துக்கே இவ்வளவு ஆற்றல் இருக்கு மானால், நிர்விகல்ப சமாதிக்கு எவ்வளவு பெரிய பேராற்றல் இருக்க வேண்டும்?

நாம் விழித்திருக்கும்போது மூன்று அல்லது நான்கு மணி நேரத்துக்கு ஒரு தடவை நமக்குப் பசியெடுக்கிறது. தாகம் எடுக்கிறது. நாம் அவ்வப்போது ஏதாவது சாப்பிட வேண் டியதிருக்கிறது.

ஆனால் நாம் உறங்கும்போது, எட்டுமணி நேரமானாலும் நமக்குப் பசியோ தாகமோ எடுப்பதில்லையே? அதற்குக் காரணம் என்ன?

பசி தாகம் போன்ற தேவைகளே நமக்குத் தோன்றாத வாறு, நமது உடலுணர்வைத் (தற்காலிகமாகவேனும்) திரையிட்டு மறைத்துவிடக் கூடிய சக்தி உறக்கத்துக்கு இருக்கிறது.

கேவலம், உறக்கத்துக்கே இவ்வளவு சக்தியிருக்கு மானால், நிர்விகல்பசமாதிக்கு எவ்வளவு பெரிய சக்தியி ருக்க வேண்டும்?

உறக்கம் மூர்ச்சை முதலியவற்றுக்கும், நிர்விகல்பசமாதிகும் உள்ள அடிப்படை வேறுபாடு என்னவென்ருல்;

உறக்கத்திலும் மூர்ச்சையிலும், மனமானது மூலப்பிரகிருதி யெனப்படுகிற பேரிருளில் போய் ஒடுங்குகிறது.

நிர்விகல்பசமாதியில், மனமானது அந்த மூலப்ரகிருதியையும் கடந்து சென்று, நேரே ஆத்மாவில் போய் ஒடுங்குகிறது.

சூரியனை மறைத்து நிற்கும் மேகப்படலம் போல, இந்த மூலப்ரகிருதி ஆத்மாவை மறைத்து நிற்கிறது. ஆத்மாவை மறைத்து நிற்கும் காரணத்தால், அதனை அவித்தை (அல்லது அஞ்ஞானம்) என்ற பெயராலும் குறிப்பிடுவார்கள். நம் மனமானது ஒவ்வொரு நாளும் நாம் உறங்கும்போது இந்த அஞ்ஞானத்தில் போய் ஒடுங்கி, நாம் விழிக்கும்போது இந்த அஞ்ஞானக் குகையிலிருந்து வெளிக்கிளம்பி வருகிறது.

ஆனால், நிர்விகல்பசமாதியின் மூலம் மனமானது இந்த அஞ்ஞானத்தைக் கடந்து நேரடியாக ஆத்மாவில் போய் ஒடுங்குவதற்குக் கற்றுக் கொள்ளுமாயின், அஞ்ஞானமானது நாளுக்கு நாள் தன் சக்திகளை இழந்து கொண்டே வரும்.

அஞ்ஞானத்துக்கு இரண்டு வகையான சக்திகள் உண்டு. ஒன்று, ஆத்மாவை மறைக்கும் சக்தி: இதனை ஆவரண சக்தி யென்று கூறுவார்கள். மற்றொன்று, கட்டாந்தரையிலே கானல் நீரின் தோற்றம் ஏற்படுவது போல, ஆத்மாவினிடத்தே பிரபஞ்சத்தின் (அதாவது, உலகத்தின்) தோற்றத்தை உண்டுபண்ணும் சக்தி; இதனை விக்ஷேப சக்தி யென்று சொல்லுவார்கள்.

உறக்க காலத்திலும் மூர்ச்சையுற்ற காலத்திலும் அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியை நாம் அனுபவிக்கிறோம்.

விழிப்புக்காலத்தில், அஞ்ஞானத்தின் விக்ஷேப சக்தியை நாம் அனுபவிக்கிறோம்.

ஆனால் நிர்விகல்பசமாதியின் போது, இந்த அஞ்ஞானமானது, ஆவரணம் விக்ஷேபம் என்னும் தன்னுடைய இரண்டு சக்திகளையும் இழந்து நிற்கிறது. அதனால், அப்போது ஆத்மாவும் மறைபடுவதில்லை. பிரபஞ்சமும் தோன்றுவதில்லை. இந்த உயரிய நிலையைத்தான் தூங்காமல் தூங்கும் சுகானுபவம் என்று சொல்லுவார்கள்.

### ஆத்ம சுகமும்<br>உலகியல் இன்பங்களும்

இந்த சுகானுபவத்தில் சிறிதேனும் திளைத்துச் சுவைகண்டவர்களுக்கு, அப்புறம் இந்த உலகியல் இன்பங்கள் அனைத்தும் மிகத் துச்சமாகத் தோன்றுமாம். இதனை ஓர் அருமையான உபமானத்தால், நம் முன்னோர்கள் விளக்கிக் கூறியுள்ளார்கள். அதாவது,—

ஏழெட்டு வயதுச் சிறுமி யொருத்தி, செப்பையும் சிமிழையும் வைத்துக் கொண்டு, தன்னோடொத்த சிறுமிகளோடு சேர்ந்து மணல் வீடு கட்டி விளையாடுகிறாள். அந்த விளையாட்டிலே அப்போது அவள் ஆனந்தம் காண்கிறாள்.

அதே பெண்ணுக்கு வயது பதினெட்டு ஆகி விடுகிறது. அவளுக்குத் திருமணமும் செய்து வைத்து விடுகிறார்கள். சாந்தி முகூர்த்த இரவன்று, அவள் தன் கணவனோடு கலந்து ஆனந்தம் அனுபவிக்கிறாள்.

அந்த ஆனந்தத்தை ஒருமுறை அனுபவித்துச் சுவை கண்ட பிறகு, அவள் மறுபடியும் செப்பையும் சிமிழையும்

அவர் எந்த அளவுக்குத் தம் உடலுணர்வை இழந்து விடுகிருரோ, அந்த அளவுக்கு அவர் நிர்விகல்ப சமாதியில் ஆழ்ந்திருக்கிருர் என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

### இடையூறுகளே அருந்தவத்தின் அளவுகோல்கள்

சாதாரண உறக்கத்தையே எடுத்துக் கொள்வோம். பக்கத்திலே ஒரு சிறு சப்தம் கேட்டாலும் விழித்துக் கொள் பவர்கள் பலர் உண்டு. கொசுக்கடியினுல் அல்லது மூட்டுப் பூச்சியின் கடியினுல் விழித்துக் கொள்பவர்களே உலகில் நிரம்பப் பேர் இருக்கிருர்கள். ஆனுல், கொசுக்களும் மூட்டுப் பூச்சிகளும் ஈக்களும் எறும்புகளும் கடித்தாலும் கூட, உணர்ச்சியில்லாமல் தூங்குகிறவர்கள் ஒரு சிலர் இருக் கிருர்கள். அவர்களது உறக்கம் அந்த அளவுக்கு ஆழமானது என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். அதாவது, இந்தப் பூச்சிகளும் எறும்புகளும், அவர்களது உறக்கத்தின் ஆழத்தை அளந்தறிவதற்கான அளவுகோலாகப் பயன்படுகின்றன.

அதேபோல், தேள்களும் மற்ற விஷஜந்துக்களும், ஸ்ரீ ரமண பகவானது நிர்விகல்ப சமாதியின் ஆழத்தை அளந் தறிவதற்கான அளவு கோலாகப் பயன்பட்டன என்று நாம் கருதுவது தவருகாது.

துடையில் இரத்தமும் சீழும் வடியும்படியாகப் புண்கள் ஏற்பட்டும்கூட, அவற்றின் வேதனையைச் சிறிதும் உணராத அளவுக்கு அவர் சமாதியில் ஆழ்ந்திருந்தார் என்பதை, உலகினர் உணர்ந்து கொள்வதற்கு அந்த விஷ ஜந்துக்கள் பயன்பட்டன. அதே போல், சமாதிகலைந்த பிறகு, ஸ்ரீரமண

பகவானே தம்முடைய ஆத்மானுபவத்தின் முதிர்ச்சியை அறிந்து கொள்வதற்கும் அவை பயன்பட்டிருக்க வேண்டும்.

அவருடைய சமாதியின் பெருமையை உலகினர் உணர்ந்து கொண்டதால், அவருக்கு ஒன்றும் இலாபம் இல்லை. எனினும், உலகினருக்கு அதனால் மிகப் பெரிய இலாபம் ஏற்பட்டது. அதாவது, மக்கள் அவரை பயபக்தியோடு வந்து தரிசித்துப் பயன்பெறுவதற்கு, அது உதவி புரிந்தது.

அதே சமயத்தில், தமது ஆத்மானுபவத்தின் முதிர்ச்சியைத் தாமே தெரிந்து கொள்வது, ஒரு சாதகருக்குத் தம்முடைய சாதனையில் மேலும் மேலும் ஊக்கத்தையும் சிரத்தையையும் உண்டுபண்ணுவதற்கு இன்றியமையாததாகும். அந்த முறையில், அது ரமணருக்கு இலாபம்.

இவ்வாறு, சாதகருக்கும் உலகினருக்கும் ஒருங்கே பயன்படுமாறு திருவுளங்கொண்டு, இறைவன் அந்த விஷ ஜந்துக்களை ஏவி ரமணரைக் கடிக்கச் செய்தான் போலும்! இல்லாவிட்டால், சிந்தையொடுங்கிச் சிவானுபூதியில் திளைத்திருக்கும் மஹாத்மாக்களின் யோக க்ஷேமங்களைப் பாதுகாப்பதற்குக் கடமைப்பட்டுள்ள பரமன், விஷ ஜந்துக்களால் கடிபடுமாறு அவரை விட்டிருக்கமாட்டான். எனவே, அதுவும் அவனது திருவருட் செயலே யென்பதில் எள்ளத்தனையும் ஐயமில்லை.



## 6. கல்லாத கல்வியும், கருதாத செல்வமும்.

பாதாளக் கோயிலிலிருந்து கோபுரம் . சுப்ரமணியர் ஆலயத்திற்குக் கொண்டுவரப்பட்ட பிறகு, பகவான் முன் போல் தீவிரமான நிர்விகல்ப சமாதியில் திளைத்திருக்கவில்லை யென்று தெரிகிறது. முன்பெல்லாம் நாள் கணக்கில், மாதக் கணக்கில், வருஷக்கணக்கில் ஒரேயடியாகச் சமாதியில் உட்கார்ந்திருந்தவர், இப்போது மணிக்கணக்கில் மட்டுமே உட்காரலானார். அதற்குக் காரணம், அவர் தம்முடைய சாதனையின் முதற் கட்டத்தைத் தாண்டி இரண்டாவது கட்டத்தில் அடியெடுத்து வைத்ததேயாகும்!

அந்த முதற் கட்டம்தான் நிர்விகல்ப சமாதி: இரண்டாவது கட்டம் ஸஹஜசமாதி. இவ்விருவகை சமாதிகளின் தன்மையை நாம் ஏற்கெனவே விரிவாக ஆராய்ந்துள்ளோம்.

நிர்விகல்ப சமாதிக் காலத்தில் தம் உடலோடும் உலகத்தோடும் அறவே தொடர்பற்றிருந்த அந்த மஹாத்மா, ஸஹஜ சமாதிக் காலத்தில் அவ்விரண்டோடும் ஏதோ சிறிது தொடர்பு உடையவர்போலப் பார்ப்பவர் கண்களுக்குக் காட்சியளித்தார். அவ்வப்போது தமக்குக் கொடுக்கப்பட்ட ஆஹாரங்களையும், சிறிதும் விருப்பு வெறுப்பு இல்லாமல் உட்கொண்டு வந்தார்.

இந்த சமயத்தில், அவரை சிரத்தையோடு கவனித்துப் பணி புரிவதற்கு, பல பாக்கியவான்கள் முன்வந்தனர். அவர்களது பெயர்களையும், அவர்கள் ஆற்றிய தொண்டுகளையும் தெரிந்துகொள்வது, இங்கே நமக்கு அவ்வளவு முக்கியமல்ல. பகவானுடைய ஆன்மீக வளர்ச்சியைத் தெரிந்துகொள்வதே நமக்கு முக்கியமாகும்.

இந்தக் கட்டத்தில் பகவான் எந்த ஓர் இடத்திலுமே நிலையாக அமர்ந்துவிடவில்லை. பூந்தோட்டம், வாகன மண்டபம், வில்வமரத்தடி, இலுப்பை மரத்தடி, மங்கைப்பிள்ளையார் கோயில், விரூபாக்ஷக் குகை, இப்படிப் பல்வேறு இடங்களில் அவர் மாறி மாறி இருக்கைகொண்டு வந்தார். கடைசியாக, அவர் பவளக்குன்று என்னும் இடத்தில் தங்கியிருக்கும்போதுதான், அவரை ஈன்றெடுத்த அருமை அன்னை அழகம்மையார், தன்னுடைய காணாமற்போன மைந்தன் திருவண்ணாமலையில் இருப்பதைத் தெரிந்து அவரைப் பார்க்க வந்தார்.

வந்து பார்த்து, அந்த அம்மையார் கதறினார்; கண்ணீர் விட்டார். மீண்டும் தன்னோடு வீட்டுக்கு வந்துவிடுமாறு, பகவானைக் கல்லும் கரையுமாறு அவர் உருக்கமாக அழைத்தார்.

ஆனால், பகவான் அவரோடு ஒரு வார்த்தையும் பேசவில்லை. பகவானுடைய பார்வையில்கூட, அந்த அம்மையாரால் ஒரு பாவத்தையும் காணமுடியவில்லை. கடைசியாகப் பல நாட்களுக்குப் பிறகு, அருகிலிருந்தவர்களின் இறைஞ்சுதலுக்கு இணங்கி, பகவான் தமக்குக் கொடுக்கப்பட்ட ஒரு காகிதத்திலே பின்வருமாறு எழுதிக் காட்டினார்.

“அவரவர் பிராரப்தப் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்தாட்டுவிப்பன். என்றும், நடவாததென் முயற்சிக்

கினு நடவாது; நடப்ப தென்றடை செய்யினு நில்லாது. இதுவே திண்ணம். ஆகலின், மௌனமாயிருக்கை நன்று.''

மைந்தனுடைய மனவுறுதியைக் கண்டு, அன்னையார் மனம் நொந்து ஊர் திரும்பினர். பிற்பாடு பல ஆண்டுகளுக்குப் பிறகு, அவரும் தம் பாசப் பற்றுகளையெல்லாம் விட்டொழித்து, உலகியல் வாழ்வில் உத்தமமான விரக்தி பூண்டு, திருவண்ணுமலைக்கு வந்து தம் இறுதிக் காலம் வரையில் பகவானுடனேயே தங்கிவிட்டார். அன்னையாரின் சமாதிதான் இப்போது மாத்ரு பூதேஸ்வரர் ஆலயமாக விளங்கிக்கொண்டிருக்கிறது.

## வாக்கியார்த்தமும்
## லக்ஷியார்த்தமும்

பகவானைப் பார்க்கவரும் கூட்டம், நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டிருந்தது. அவர் யாருடனும் பேசுவதில்லை. ஆனால் அவரது பார்வை பட்ட மாத்திரத்திலேயே, சஞ்சலமுற்ற உள்ளங்களில் சாந்தி பிறந்தது. பக்தியில்லாத உள்ளங்களில் பக்தி பிறந்தது. அவரைத் தரிசிக்க வந்தவர்களெல்லாம், விளக்கம் கூற இயலாத ஒருவித மனநிறைவுடன் திரும்பிச் சென்றனர். மஹான்களின் அருட்கடாக்ஷத்துக்கு அத்தகைய அற்புத சக்தி உண்டு என்பது, அதனை அனுபவித்துப்பார்த்தவர்களுக்கே தெரியும்.

இத்தகைய ஸஹஜசமாதிக் காலத்தில்தான், பகவான் தம் கையில் வலிய வந்து சேர்ந்த பல வேதாந்த நூல்களைப் பார்க்கத் தொடங்கினர். அவற்றுள் எதையும் படிக்காத நிலையில் தாம் பெற்ற ஆத்மானுபவங்களே, அந்நூல்களிலும் விவரிக்கப்பட்டிருப்பதை அவர் கண்டார். அதுமட்டும் அல்ல; தாம் கையாண்ட ஸாதனமுறைகள் சாஸ்திர சம்மத

மானவையே என்பதும், அந்நூல்களின் மூலம் அவருக்கு உறுதியாயிற்று.

நாமும்தான் எத்தனையோ வேதாந்த நூல்களைப் படிக்கிறோம். அந்த நூல்களுக்குப் பெரியோர்களால் எழுதப்பட்டுள்ள பழமையான வியாக்யானங்களையும் பார்க்கிறோம். ஆனால், அந்த நூல்களிலிருந்தும் வியாக்யானங்களிலிருந்தும், நாம் என்ன புரிந்து கொள்கிறோம்?

சொற்களுக்கு இரண்டுவகையான அர்த்தங்கள் உண்டு. ஒன்று, வாக்கியார்த்தம்; மற்றொன்று, லக்ஷியார்த்தம். வாக்கியார்த்தம் என்பது வெளிப்படையான பொருள். லக்ஷியார்த்தம் என்பது உட்பொருள்.

ஒருவருக்கு நாம் மூன்றாம் பிறைச்சந்திரனைக் காட்ட விரும்பினால், முதலில் ஒரு பனை மரத்தைக் காட்டி, பிறகு, "அந்தப் பனைமரத்தின் உச்சிக்கு மேலே ஓர் அடி உயரத்தில் பார். அங்கே நகவளைவு போல வானத்தில் காணப்படுகிற ஒரு சிறிய கோடுதான் மூன்றாம்பிறை!" என்று சொல்லுகிறோம், அல்லவா? இதிலே அந்தப் பனை மரத்தைப் போன்றது வாக்கியார்த்தம். பிறைச் சந்திரனைப் போன்றது லக்ஷியார்த்தம்.

புலவர்கள், பண்டிதர்கள், வித்வான்கள் போன்ற பெருங் கல்வியாளர்களுக்கெல்லாம், வேதாந்த நூல்களினது வாக்கியார்த்தம்தான் புலப்படுமேயன்றி, லக்ஷியார்த்தம் புலப்பட மாட்டாது. அனுபூதிமான்களுக்கு மட்டுமே லக்ஷியார்த்தம் புலப்படும்.

அதாவது, ஒருவர் எவ்வளவுதான் கல்வியில் கரைகண்ட மஹா பண்டிதராயிருந்தாலும், அவரால் பனைமரத்தைத் தான் காட்டமுடியுமே தவிர, பிறைச்சந்திரனைக் காட்ட

முடியாது. ஆனால் வேதாந்த நூல்களில் பேசப்பட்டிருப்பது பனைமரம் அல்ல; பிறைச் சந்திரன். அந்தப் பிறைச் சந்திரனை ஏற்கெனவே பார்த்துள்ள ஒருவரால் தான், அதைப் பிறருக்குக் காட்டமுடியும்.

நாமெல்லாம் வேதாந்த நூல்களைப் படிக்கும்போது, பனைமரத்தை மட்டுமே பார்க்கிறோம். ரமணர் படிக்கும் போது, அவருக்குப் பிறைச் சந்திரன் தெரிந்தது. காரணம், அவர் ஏற்கெனவே தமக்குள் அந்தப் பிறைச் சந்திரனைக் கண்டு அனுபவித்தவர்.

எனவே தான், அவர் கண்டு அனுபவித்த அந்தப் பிறைச் சந்திரனை, வேதாந்த நூல்களின் வாயிலாகத் தமக்கும் காட்டிக் கொடுக்கும்படி, கற்றோரும் மற்றோரு மான பல பக்தர்கள் வந்து பகவானைப் பிரார்த்தித்தனர்.

அந்த பக்தர்களுக்காக அவர் பல நூல்களுக்குப் பொருள் கூறத் தொடங்கினார். இதுவே அவர் தம்முடைய சித்தியின் இரண்டாவது கட்டமாகிய ஸஹஜ சமாதியிலிருந்து, மூன்றாவது கட்டமாகிய ஸ்திதப்ரக்ஞ நிலையில் அடியெடுத்து வைத்த சமயம் என்று சொல்லலாம்.

ஸஹஜ சமாதிக்கும் ஸ்திதப்ரக்ஞ நிலைக்கும் உள்ள வேறுபாட்டை நாம் முன்னமேயே ஆராய்ந்துள்ளோம். ஸஹஜசமாதிக் காலத்தில் பெரும்பாலும் மௌனமாகவே யிருந்து வந்த பகவான், ஸ்திதப்ரக்ஞ நிலையில் எல்லோ ருடனும் தாராளமாகப் பேசத்தொடங்கினார். அப்படியே தம் இறுதி நாட்கள் வரையிலும் பேசிக் கொண்டே யிருந்தார்.

## ஸ்ரீ ஜகதீச சாஸ்திரிகளின் அனுபவம்

பகவான் ஓரளவு தமிழும் ஆங்கிலமும் மட்டுமே பள்ளிக்கூடத்தில் படித்திருந்தார். அவருக்கு ஸம்ஸ்கிருத மொழியில் பயிற்சியே கிடையாது. எனினும், ஆதிசங்கரரின் விவேகசூடாமணி போன்ற உயரிய வடமொழிக் கிரந்தங்களுக்கும்கூட, அவர் தெளிவாக வியாக்யானம் கூறத் தொடங்கினர்!

விவேக சூடாமணிக்கு அவரே தமிழில் ஓர் உரையெழுதியிருக்கிறர். திருக்திருசிய விவேகம் என்னும் வடமொழி நூலுக்கும் ஓர் உரையெழுதியிருக்கிறர். தேவி காலோத்தரம் ஞானசாரவிசாரப் படலத்தையும் சர்வக் ஞானேத்தரம் ஆன்ம சாக்ஷாத்காரப் பிரகரணத்தையும், தமிழில் செய்யுள் வடிவத்தில் மொழிபெயர்த்திருக்கிறர். இந்த அளவு ஸம்ஸ்கிருத ஞானம் அவருக்கு எங்கிருந்து வந்தது?

தமிழிலும் அருணசல ஸ்துதி பஞ்சகம், உபதேசவுந்தியார், உள்ளது நாற்பது, ஏகான்ம பஞ்சகம் போன்ற பல செய்யுள் நூல்களை அவர் இயற்றியுள்ளார். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு மணியேயாளுலும், அவையனைத்தினுள்ளும் ஒரு சிரோமணியாகக் கருதப்படத்தக்கது உள்ளது நாற்பதேயாகும். உபநிடதங்களுக்குள்ளே மாண்டூக்யம் எப்படியோ, அப்படி ரமண நூல்களுக்குள்ளே "உள்ளது நாற்பது."

பிரம்மஸ்ரீ வி. ஜகதீச சாஸ்திரிகள் என்பவர் ஷட் சாஸ்திர பண்டிதர். கீர்வாண பாஷையில் இணையற்ற புலமை படைத்தவர். பகவானுடன் கூடவே பலகாலம் இருந்து, அவருடைய அன்புக்குப் பாத்திரமானவர். வடமொழி வேதாந்த நூல்களில் கரை கண்டவர்.

பகவான் தமிழில் செய்த நூல்களையெல்லாம், அவர் ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்திருக்கிறர். "உள்ளது

நாற்பதில்'' ஒரு பத்துப் பதினைந்து செய்யுட்களை மொழி பெயர்த்த பிறகு, அந்த நூல் முழுவதையும் ஏற்கெனவே காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகள் மொழிபெயர்த்து விட்டார் என்பது தெரிய வந்தது. இருந்தாலும், ஜகதீச சாஸ்திரிகளையும் அதை முழுமையாக மொழிபெயர்க்கும்படி பகவான் ஆக்ஞாபித்தார்.

அப்படி மொழிபெயர்க்கும்போது, பகவான் அவ்வப் போது அந்த மொழி பெயர்ப்புக்களைப் படித்துப் பார்த்துத் திருத்தங்கள் சொல்லுவாராம். ''இந்தப் பதம் இங்கே சரியாக அமையவில்லை. ஆகையால், இதற்குப் பதிலாக இன்ன பதத்தைப் போடு!'' என்று கூறுவாராம்.

ஜகதீச சாஸ்திரிகளின் எழுத்திலே திருத்தம் சொல்லு வதற்கு, மாபெரும் பண்டிதர்களே துணிய மாட்டார்கள். அப்பேர்ப்பட்ட ஒரு மஹாவித்வானையும் திருத்தக்கூடிய ஸம்ஸ்கிருத ஞானம், பகவானுக்கு எப்படி ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது?

அது மட்டும் அல்ல. பகவான் திருவண்ணாமலைக்கு வந்து, வெறும் கௌபீனதாரியாகத்தான் சமாதியில் உட்கார்ந்தார். தாம் இருக்கும் இடம் யாருக்கும் தெரியக் கூடாது என்றே, அவர் பாதாள லிங்கத்தின் மறைவில் போய் அமர்ந்தார். எனினும், மலர் இருக்கும் இடத்தை வண்டுகள் தேடிச் செல்வதுபோல, பக்தர்களின் கூட்டம் அவரைத் தேடிவந்தது. திருவண்ணாமலையில் அருணாசலேசன் சந்நிதிக்குப் போகாதவர்கள்கூட, ரமண பகவானது சந்நிதியை நாடி வந்தார்கள். அவருக்கென்று ஒரு பெரிய ஆசிரமம் அமைக்கப்பட்டது. அந்த ஆசிரமத்துக்கு லக்ஷக் கணக்கில் நன்கொடைகள் வந்து குவிந்தன. இத்தனைக்கும் பகவான் கடைசிவரையில் அந்தச் சொத்துக்களோடு எள்ளத்தனை தொடர்பும் வைத்துக் கொண்டவர் அல்லர்.

அவர்தான் தமது தேஹத்துடனேயே தொடர்பு வைத்துக் கொண்டவர் அல்லவே? செல்வத்துடனு தொடர்பு வைத்துக்கொள்வார்? அப்படியிருந்தும், அவர் இருக்கும் இடத்தில் சகல ஐஸ்வர்யங்களும் தாமாகவே வந்து குவிந்தன. அதற்குக் காரணம் என்ன?

### வறுமையும் செல்வமும்

கல்வியை முயன்று கற்பவர்களுக்குக் கல்வி வர மாட்டேன் என்கிறது. செல்வத்தை முயன்று தேடுபவர் களுக்குச் செல்வம் வரமாட்டேன் என்கிறது. பகவான் (வடமொழிக்) கல்வியையும் கற்கவில்லை. செல்வத்தையும் தேடவில்லை. ஆனுல், அவ்விரண்டும் அவரைத் தேடி வந்தன என்ருல், அதில் ஓர் இரகசியம் இருக்கிறது.

நமக்கு வெளியே விளங்கிக்கொண்டிருக்கிற ஏட்டுக் கல்வி உண்மையான வித்தை அல்ல. நமக்கு வெளியே புழங்கிக்கொண்டிருக்கிற காசும் பணமும் உண்மையான செல்வம் அல்ல. உண்மையான வித்தையும், உண்மை யான செல்வமும், நமது ஆத்மா ஒன்றேதான். அந்த ஆத்மாவின் சாயைகள் அல்லது பிரதிபலனங்களே, உலகியல் வித்தைகளும் உலகியல் ஐஸ்வர்யங்களும்.

சூரியனை மேகப்படலங்கள் மறைப்பது போல், ஆத் மாவை அவித்தை மறைத்துக்கொண்டிருக்கிறது என் பதை, நாம் ஏற்கனவே கண்டுள்ளோம். அவித்தையினது அந்த மறைக்கும் சக்திக்கு, ஆவரண சக்தியென்று பெயர்; இதையும் நாம் முன்னமேயே அறிந்துள்ளோம்.

அவித்தை எந்த அளவுக்கு வலுவுள்ளதாக் இருக் கிறதோ, அந்த அளவுக்கு ஆத்மா மறைபடுகிறது.

ஆத்மா எந்த அளவுக்கு, மறைபடுகிறதோ, அந்த அளவுக்கு மனிதன் மூடனாகவும், தரித்திரனாகவும், சக்தியற்றவனாகவும், குணக்கேடனாகவும் காட்சியளிக்கிறான்.

அதேபோல், அவித்தையினது ஆவரண சக்தி (அதாவது, மறைக்கும் சக்தி) எந்த அளவுக்குத் தேய்வுற்று மெலிகிறதோ, அந்த அளவுக்கு ஆத்மா விளக்கம் பெற்றுத் திகழும். ஆத்மா எந்த அளவுக்கு விளக்கம் பெறுகிறதோ, அந்த அளவுக்கு மனிதன் வித்யாவானாகவும், ஐஸ்வர்யவானாகவும், சக்திமானாகவும், குணவானாகவும் காட்சியளிப்பான்.

ஒருவன் நிருவிகல்ப சமாதியில் முதிர்ச்சி அடைய, அவனது ஆன்மாவைச் சூழ்ந்து நிற்கும் அவித்தையெனப்படுகிற மூலப்ரகிருதியின் ஆவரண விக்ஷேப சக்திகள் தாமாகவே ஒழிந்துவிடுகின்றன. (ஆத்மாவினிடத்தே பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதே விக்ஷேப சக்தியென்பதை, நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம்). அந்த இரு சக்திகளும் ஒழிவதனாலேயே, புலன்கள் இயங்கும் காலத்திலும் மனம் மௌனமாயிருக்கக்கூடிய ஸஹஜசமாதியும், மனம் இயங்கும் காலத்திலும் ''தான் என்னும் முனைப்பு'' (அதாவது, அஹங்காரம்) எழாமலிருக்கக்கூடிய ஸ்திதப்ரக்ஞ நிலையும், முறையே சித்திக்கின்றன.

எனவே, ஸ்திதப்ரக்ஞ நிலையை எய்திவிட்ட ஒருவன், மூலப்பிரகிருதியின் ஆவரண விக்ஷேப சக்திகளிலிருந்து அறவே விடுபட்டவன் என்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

பகவான் ரமணர் அத்தகைய ஸ்திதப்ரக்ஞ நிலையை அடைந்தவர். நெடுங்கால நிர்விகல்ப சமாதியின் மூலம், தம்முடைய ஆத்மாவை மறைத்துக்கொண்டிருந்த அவித்தை

யென்னும் திரையைக் கிழித்தெறிந்தவர். திரை கிழிந்த வுடன் ஆத்மா சுயம் பிரகாசமாக விளங்கவேண்டியது தானே? அது அப்படி விளங்கும்போது, ஆத்மாவின் அந்த விளக்கமே, உலகியலில் அற்புதமான வித்தைகளாகவும் அளப்பரிய செல்வங்களாகவும் காட்சியளிக்கின்றது. கல் லாத கல்வியும், கருதாத செல்வமும் பகவானைத் தாமாகவே தேடிவந்து அடைந்தன என்றால், அதற்கு இதுவே காரண மாகும்.



## 7. பகவான் ஓர் உபாசகரா ?

1949'ம் ஆண்டிலே, ரமணாச்ரமத்தைச் சேர்ந்த ஸ்ரீமாத்ருபூதேஸ்வரர் ஆலயத்தில், ஸ்ரீசக்ரமேரு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

நம் பாரத தேசத்திலுள்ள புனிதமும் புகழும் வாய்ந்த ஸ்ரீவித்யா மண்டலிகளில் ஒன்றாக விளங்குகிற ஸ்ரீகுஹானந்த மண்டலியின் ஆசார்ய மஹாபுருஷர் சிதானந்தநாதர் என்னும் பிரம்மஸ்ரீ ந. சுப்ரமணிய ஐயரவர்கள், அந்தப் பிரதிஷ்டையைச் செய்வதாக இருந்தது.

ஆனால், எதிர்பாராதவாறு ஏற்பட்ட உடல் நலக் குறைவின் காரணமாக, அந்த ஆசார்யேந்திரரால் திருவண்ணாமலை செல்வதற்கு இயலவில்லை. எனவே, அவரது பிரதான சிஷ்யர்களில் ஒருவரும், ஸ்ரீவித்யாமார்த்தாண்டர் என்னும் பெருமைக்குரிய விருதினைப் பெற்றவரும், ஸ்ரீவித்யா சாஸ்திரங்களிலும் சம்பிரதாயங்களிலும் ஆழ்ந்த அறிவும் முதிர்ந்த அனுபவமும் வாய்ந்தவருமாகிய பிரம்ம ஸ்ரீ ஸி. வி. ஸ்வாமி சாஸ்திரிகளே பிரதான ஆசார்யராக இருந்து, அந்த ஸ்ரீசக்ரமேருவைப் பிரதிஷ்டை செய்து வைத்தார்.

கணபதி ஹோமம், சண்டிஹோமம், ஸ்ரீவித்யாஹோமம் போன்ற பலஹோமங்களும், நவாவரண பூஜை, குமாரி பூஜை, சுவாஸினி பூஜை போன்ற பூஜைகளும், மிக விமரி

சையாக நடைபெற்றன. பூஜைகளுக்கும் ஹோமங்களுக்கும் உரிய திரவியங்கள் மலைமலையாகக் கொண்டு வந்து குவிக்கப்பட்டிருந்த காட்சி, இராமாயணத்தில் வருணிக்கப்படுகிற தசரதனது யாகசாலையை நினைவூட்டுவதாய் இருந்தது. வேதிகைக்கு மேலே அறுபதடி உயரத்தில் ஸ்ரீசக்ரக் கொடி பறக்கவிடப்பட்டது.

மேருவைப் பிரதிஷ்டை செய்வதற்கு முன்னால், அதனை ஸ்தாபிதம் செய்யப்போகும் பிலத்திலே, வேறு பல பொருள்களோடு ஒரு சில நவரத்னக் கற்களையும் போடுவது வழக்கம். ஆனால், ரமணாசிரமத்தில் நடைபெற்ற பிரதிஷ்டையின்போது, ஒரு சிறங்கை நவரத்னங்கள் போடப்பட்டனவாம்!

பகவான் ரமணருக்கு அப்போது உடல்நலமில்லாதிருந்த சமயம். எனவே, அவரை ஒரு நாற்காலியில் வைத்து அந்த இடத்துக்குத் தூக்கி வந்தனர். அப்போது ஓர் அதிசயமான நிகழ்ச்சி நடந்தது.

அதாவது—

பகவான் ரமணர் எப்போதும் கோவணதாரியாகவே காட்சியளிப்பது வழக்கம். அந்தக் கோவணத்தைத் தாங்கியிருக்கும் அரைஞாண், ஒரு சிறு துணியிலானதாகயிருக்கும். அவரது இடுப்பைச் சுற்றி ஒரு கயிறுபோல் கட்டப்பட்டிருந்த அந்தத் துணியிலிருந்து, பத்து அல்லது பன்னிரண்டு சவரன் மதிப்புள்ளதும், சுமார் மூன்று அங்குல சதுரமுள்ளதுமான ஒரு ஸ்ரீசக்ரத்தையெடுத்து ஸ்வாமி சாஸ்திரிகளிடம் கொடுத்து, மேருவைப் பிரதிஷ்டை செய்யவிருக்கும் பிலத்திலே நவரத்னக் கற்களோடு அந்த ஸ்ரீசக்கரத்தையும் போடுமாறு பணித்தார் பகவான் ரமணர். பகவானது இந்தச் செயலானது, அருகிருந்த எல்லோரையும் பெருவியப்பில் ஆழ்த்தியது.

ஏனென்றால், ஸ்ரீசக்ரம் எனப்படுவது, தேவி உபாசகர்களால் மிகவும் இரகசியமாக வைத்துப் பூஜிக்கப்படுகிற ஒரு சக்தி வாய்ந்த யந்திரம். சக்கரங்கள் எனப்படுகிற யந்திரங்களுக்குள்ளே அது தலை சிறந்ததாய் இருப்பதால், அதற்குச் சக்ரராஜம் என்று பெயர். அதில் நாற்பத்துமூன்று முக்கோணங்கள் இருப்பதால், நாற்பத்து முக்கோணம் என்ற பெயரும் அதற்கு வழங்குவது உண்டு. ஸ்ரீசக்ரத்தின் மற்றொரு வடிவமே மேரு எனப்படுவது. எனவே, மேருவுக்குக் கீழே ஸ்ரீசக்ரத்தை ஸ்தாபிப்பது, மிகவும் பொருத்தமான ஒரு கிரியையே ஆகும்.

ஆனால், இந்த ஸ்ரீசக்ரத்தை பகவான் ரமணரிடத்தில் அதற்கு முன்பு யாருமே பார்த்ததில்லை. எனவே, அது அவருக்கு எப்போது கிடைத்தது, எப்படிக் கிடைத்தது என்பது, அங்கிருந்த எல்லோருக்குமே ஒரு புதிராக இருந்தது. மேலும், தேவி உபாஸகர்கள் மட்டுமே வைத்திருக்கக்கூடிய அந்த ஸ்ரீசக்ரத்தை, பகவான் ஏன் வைத்திருந்தார்? எவ்வளவு காலமாக வைத்திருந்தார்? அப்படியானால் பகவானும் ஓர் அம்பிகை உபாசகரா? இம்மாதிரிக் கேள்விகள் எல்லாம், ஸ்வாமி சாஸ்திரிகள் உள்பட அங்கிருந்த எல்லோரது உள்ளத்திலும் எழலாயின.

### விடைகாண முடியாத
### சில கேள்விகள்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், உலகறிய அம்பிகையை உபாசனை செய்தவர். ஆனால் பகவான் ரமணர், அம்மாதிரி வெளிப்படையாக எந்த ஓர் உபாசனையும் செய்தவரல்லர். அப்படியானால், எவருக்குமே தெரியாமல் அவர் அந்தரங்கமாக உபாசனை செய்து வந்தாரா?

ஸ்ரீசக்ர உபாசனையை அந்தரங்கமாகத்தான் செய்துவர வேண்டும் என்று, சாக்த ஆகமங்களில் விதிக்கப்பட்டிருக்

கிறது. ஆதிசங்கரரே அந்த உபாசனையை அப்படித்தான் செய்து வந்திருக்கிறார். அம்பிகை ஞானதாயினியாக இருப்பதால், தத்தாத்ரேயர் போன்ற அவதூத மஹாத்மாக்களும், ஹயக்ரீவர், அகஸ்தியர், துர்வாசர் போன்ற மஹநீயர்களும் கூட, அவளைப்பூஜித்துப்பெறற்கரிய பேறுகளைப் பெற்றிருக்கின்றனர். அந்த மரபையொட்டி, பகவான் ரமணரும் அவளை அந்தரங்கமாகப் பூஜித்து வந்தாரா?

பகவான் ரமணர், தம்முடைய வாழ்க்கையில் நிகழ்ந்த பல செய்திகளை அவ்வப்போது கூறி வந்திருக்கிறார். ஆனால், தாம் ஸ்ரீசக்ரத்தை உபாசனை செய்ததாக எந்தச் சமயத்திலும் யாரிடத்திலும் அவர் கூறியதேயில்லை.

அன்னை சோரம் போய்விட்டாளானால், அந்தச் செய்தியை அவளுடைய மகன் எப்படிப் பிறருக்குத் தெரிந்துபோய் விடாதவாறு இரகசியமாகக் காப்பாற்றுவானோ; அப்படியே, ஒவ்வொரு ஸ்ரீசக்ர உபாசகனும், தன்னுடைய உபாசனையைப் பிறர் அறிந்து கொள்ளாதவாறு இரகசியமாகக் காப்பாற்ற வேண்டும் என்று சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தவிதியைப்பின்பற்றித்தான் பகவான் ரமணர் தம்முடைய உபாசனையைப் பற்றிய செய்திகளை எவரிடமும் பேசாமல் மறைத்து வைத்திருந்தாரா?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் உண்மையான விடைகள் பகவான் ரமணருக்கும், அவருக்குள்ளே அனன்யமான அந்தர்யாமினியாக விளங்கிக் கொண்டிருந்த அந்தப் பரதேவதைக்கும் மட்டுமே தெரியும். மற்றவர்களெல்லாம் தமது விருப்பு வெறுப்புக்களின் அடிப்படையில் ஊகம் செய்ய முயல்வது, வீணான வேலையேயன்றி வேறல்ல.

பகவான் ரமணர் அந்த ஸ்ரீசக்ரத்தை அந்தரங்கமாக உபாஸனை செய்து வந்திருந்தால், இறுதியில் அவர் அதை யாரிடத்தில் விட்டுச்செல்வது? ஸ்ரீவித்யோபாசனை எனப்படு

கிற தேவி உபாசனையில் அவருக்கு யாரேனும் சிஷ்யர்கள் இருந்திருந்தால், அவர்களிடம் அதைக் கொடுத்துவிடலாம். ஆனால் அத்தகைய சிஷ்யர்கள் அவருக்கு யாருமே கிடையாது.

ஆகையால், ஸ்ரீமாத்ருபூதேஸ்வரர் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்படுகிற மேருவுக்கு அடியில் அதை ஸ்தாபித்து விடுவதே சிறந்தகாரியம் என்று அவர் முடிவு செய்திருக்க வேண்டும். அதனால்தான், தாம் அதுவரையில் எவருக்கும் தெரியாமல் இரகசியமாக வைத்திருந்த அந்த ஸ்ரீசக்ரத்தை, அன்றைய தினம் எல்லோரும் அறிய வெளியில் எடுத்து, அங்கு பிரதான ஆசார்யராக இருந்து மேருப் பிரதிஷ்டை வைபவத்தை நடத்திக் கொடுத்த பிரம்மஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகளின் கையில், பகவான் ரமணர் கொடுத்திருக்கிறார் என்று கருதவேண்டியதிருக்கிறது.

மேருப்பிரதிஷ்டையின் போதே உடல் நலமற்றிருந்த பகவான், அதன் பிறகு நீண்ட காலம் தம் சரீரத்தை வைத்திருக்கவில்லை. அந்தப் புனிதத் திருமேனி, அடுத்த ஆண்டிலேயே மறைவுற்றுவிட்டது. அது எப்படி மறைவுற்றது என்பதை, இப்போது நாம் வேறொரு கோணத்திலிருந்து விரிவாக ஆராயவேண்டும்.

## 8. மஹாநிர்வாணம்

புருஷன், பிரகிருதி என்ற இரண்டு அம்சங்களைக் கொண்டவன் மனிதன்.

இவற்றுள், புருஷன் என்பது ஆத்மா. தேகம், மனம், புத்தி, அகங்காரம் போன்ற அனுத்ம வஸ்துக்களுக்கெல்லாம் மூலப் பொருளாக விளங்குவது பிரகிருதி. தேஹாபிமானத்தால் ஆத்மாவுக்கு ஜீவத்வம் சித்திக்கிறது. "தேஹமே நான்" என்ற அபிமானம் இருக்கும் வரையில், பிரகிருதிக்குப் புருஷன் கட்டுப்பட்டவன் ஆகிவிடுகிறான். "தேஹம் வேறு—நான் வேறு" என்ற மெய்யுணர்வு எப்போது அனுபவத்துக்கு வருகிறதோ, அப்போதே பிரகிருதியின் பந்தத்திலிருந்து புருஷன் விடுபட்டவன் ஆகிவிடுகிறான்.

ஆழ்ந்த உறக்க காலத்தில், நாம் ஒரு பேரிருளில் போய் மூழ்கிக் கிடக்கிறோம் அல்லவா? அந்தப் பேரிருளே பிரகிருதியெனப்படுவது. அந்தப் பேரிருளில் போய் மூழ்கிக் கிடப்பதே, பிரகிருதிக்கு நாம் அடிமைப்பட்டவர்களாய் இருக்கிறோம் என்பதற்கு அடையாளம்.

நிர்விகல்ப சமாதியிலிருப்பவன், மற்ற எல்லா வகைகளிலும் ஆழ்ந்த உறக்கத்திலிருப்பவனைப் போலவே தோன்றினாலும், அவன் பிரகிருதியென்னும் பேரிருளில் போய் மூழ்கிவிடுவதில்லை. அந்தப் பேரிருட்படலத்தையும் தாண்டிச் சென்று, அவன் தன்னுடைய தூய ஆத்ம சொரூபத்தில்

நிலைபெற்று நிற்கிறான். எனவே, ஒருவன் நிர்விகல்ப சமாதி யில் நிலைபெற்று இருப்பதே, பிரகிருதியின் பந்தத்திலிருந்து அவன் விடுபட்டுவிட்டான் என்பதற்கு அடையாளமாகும்.

பிரகிருதியோடு பந்தப்பட்டு இருக்கும்வரையில்தான் ''தேஹமே நான்; தேஹம் வேறு—நான் வேறு அல்ல'' என் னும் தேஹாபிமானம் நம்மிடத்தில் விளங்கிக்கொண் டிருக்கும்.

பிரகிருதியின் பந்தத்திலிருந்து நாம் விடுபட்டுவிட் டால், அந்த தேஹாபிமானம் நம்மிடத்தில் விளங்க மாட்டாது.

மரணம் எனப்படுவது, இந்த தேஹாபிமானத்தைத் தவிர வேறு எதுவுமே அல்ல.

எப்படியென்றால்,—

மரிப்பது தேகம்தானே தவிர, ஆத்மா அல்ல. ஆனால் தேகத்தின் மீது கொண்டுள்ள அபிமானத்தால், அந்த தேகத்துக்கு நேருகிற சுகதுக்கங்களையெல்லாம், நாம் நம் முடைய சுகதுக்கங்களாகக் கருதிக்கொள்கிறோம். அந்த முறையில், தேகத்துக்கு ஏற்படுகிற மரணத்தையும், நாம் நம்முடைய மரணமாகக் கருதிக்கொள்கிறோம். தேகா பிமானத்தின் காரணமாக நாம் கொண்டுள்ள இந்தத் தவறான கருத்தே, உண்மையில் மரணம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது!

ஆனால் இந்தத் தவறான கருத்தை வெறும் நூலறி வின் மூலமாகவோ, அல்லது நம்முடைய புத்தியில் உரு வாக்கிக்கொள்ளப்படுகிற உறுதியான நம்பிக்கையின் மூல மாகவோ, நாம் போக்கிக்கொண்டுவிட முடியாது.

நாம் அபிமானித்துக்கொண்டிருக்கிற தேகத்துக்கு வேறாக, பிரகிருதியின் பந்தமற்ற நிலையில் ஆத்மாவை

அனுபவித்துப் பார்க்கவேண்டும். அப்படிப் பார்த்தால்தான் "தேகம் வேறு, ஆத்மா வேறு; நாம் தேகமல்ல, ஆத்மாவே; ஆகையால், தேகத்துக்கு நேருகிற சுகதுக்கங்கள் உண்மையில் நம்முடைய சுகதுக்கங்கள் அல்ல. அதேபோல் தேகத்துக்கு ஏற்படுகிற மரணமும், நம்முடைய மரணம் அல்ல!" என்னும் மெய்யுணர்வு, நம்மிடத்தில் இயல்பாகவே விளங்கத் தொடங்கும்,

அந்த மெய்யுணர்வு விளங்கப் பெற்றவர்கள் தாம், மரணத்தை வென்றவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

அப்படியானல், அவர்களுடைய தேகத்துக்கு மரணம் உண்டா, இல்லையா?

தேகத்துக்கு மரணம் உண்டு. ஆனல், அந்த மரணத்தால் அவர்கள் பாதிக்கப்படுவதில்லை. சமாதியில் இருப்பவனை எப்படி உறக்கம் வந்து அமுக்குவது இல்லையோ, அப்படியே தேகாபிமானம் அற்ற ஜீவன் முக்தனை மரணம் வந்து அமுக்குவதில்லை.

## சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம்.

உலகினரின் கண்களுக்கு ஜீவன்முக்தனும் மரணம் அடைபவன்போல்தான் காணப்படுகிறான். ஆனல், அந்த மரணத்துக்கும், நம் போன்ற மற்றவர்கள் அடைகிற மரணத்துக்கும், மிக மிக வேறுபாடு உண்டு.

எப்படியென்றால், மரணம் என்பது நியதி எனப்படும் ஊழ்வினையின் காரணமாக ஏற்படுவது. அந்த ஊழ்வினையில் மூன்று பிரிவுகள் உண்டு. அவற்றை சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்னும் பெயர்களால் குறிப்பிடுவார்கள்.

நாம் இதற்கு முந்தின பல கோடிப் பிறவிகளில் செய்துள்ள நல்வினை தீவினைகளின் தொகுதிக்கு, சஞ்சிதம் என்று பெயர்!

அந்த சஞ்சிதக் குவியலிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து எடுத்து, இந்தப் பிறவியில் நமக்குப் பலனைக் கொடுப்பதற்கென்று இறைவன் சில நல்வினை தீவினைகளை நமக்குத் தொகுத்து அளிக்கிறான். அந்தத் தொகுதிக்கே பிராரப்தம் என்று பெயர்.

அதைத் தவிர, இந்தப் பிறவியிலேயே நாம் நாள் தோறும் புதிது புதிதாகப் பல நல்வினை தீவினைகளைச் செய்து கொண்டு வருகிறோம். அவற்றின் தொகுதிக்கு ஆகாமியம் என்று பெயர்.

இம்மூன்றனுள், அஞ்ஞானம் ஒழியப் பெற்று ஆத்மானுபூதிமானாக விளங்குகிற ஜீவன் முக்தனுக்கு, சஞ்சிதமும் ஆகாமியமும் அறவே ஒழிந்து விடுகின்றன எனவும், பிராரப்தம் மட்டும் அவனது உடலுள்ள வரையில் அந்த உடலைப் பற்றி நிற்குமென்றும், வேதாந்த நூல்கள் கூறும்.

ஆனால், கோடக நல்லூர் சுந்தர ஸ்வாமிகள் போன்ற சில மஹா ஞானிகள் இக்கருத்தை ஏற்றுக் கொள்வதில்லை.

''தசரதனுக்கு மூன்று மனைவியர் இருந்தனர். தசரதன் இறந்தவுடன் அவர்களில் இரண்டு பேர் அமங்கலைகளாயினர். ஒருத்தி மட்டும் சுமங்கலியாகவேயிருந்தாள்!'' என்று சொல்வது எவ்வளவு அபத்தமானது!

அதேபோல், ''அஞ்ஞானம் மறைந்தவுடன், சஞ்சிதமும் ஆகாமியமும் ஒழிந்து விடுகின்றன. பிராரப்தம் மட்டும் ஒழியாமல் மிஞ்சியிருக்கிறது!'' என்று கூறுவதும் அபத்தமேயாகும் என்பது சுந்தர ஸ்வாமிகள் கருத்து.

அப்படியானால், பிராசீனமான வேதாந்த நூல்கள் கூறுவது பிழையா? அல்லது மஹா அனுபூதிமானுகிய சுந்தர ஸ்வாமிகள் சொல்லுவது பிழையா?

இரண்டும் பிழையல்ல. அந்த இருவகைக் கருத்துக்களும் உண்மையில் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையும் அல்ல.

தேகம் என்பதே பிராரப்தத்தின் பயனுக வந்திருப்பதால், அந்த தேகம் இருக்கும் வரையில் அதையொட்டிய பிராரப்தமும் இருக்கும் என்பது சரியே.

ஆனுல், ஞானியினுடைய தேகத்தைப் பற்றி நிற்கும் பிராரப்தத்துக்கும், நம்முடைய தேகத்தைப் பற்றி நிற்கும் பிராரப்தத்துக்கும், மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு உண்டு.

நம்முடைய தேகத்தைப் பற்றி நிற்கும் பிராரப்தத்தை, நாம் அனுபவித்தே தீரவேண்டும். அதை நம்மால் ஒரு போதும் விலக்கிக்கொள்ள முடியாது. அதனுல்தான், "ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று, சூழினும் தான் முந்துறும்" என்ருர் திருவள்ளுவர்.

ஞானியினது தேகத்தைப் பற்றி நிற்கும் பிராரப்தம் அப்படிப்பட்டதல்ல. அந்த பிராரப்தம் ஏதேனும் ஒரு பலனைக் கொடுக்க முற்படும்போது, அவன் விரும்பினுல் அதை ஏற்றுக் கொண்டு அனுபவிக்கலாம். விரும்பா விட்டால், அதை ஏற்றுக் கொள்ளாமல் விலக்கிக் கொண்டு விடலாம். இதைக் கருத்திற் கொண்டுதான், "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித், தாழா துஞற்றுபவர்" என்கிருர் அதே திருவள்ளுவர்.

## கூற்றம் குதித்தலும் கைகூடும்.

நாம் குழந்தையாயிருக்கும்போது, நமக்குப் பிடிக்காத கசப்பு மருந்தை அன்னை நம் வாயில் வலுக்கட்டாயமாக ஊட்டுகிறாள். நாம் பெரியவர்களாக வளர்ந்து விட்ட பிறகு, அதே அன்னை எந்த மருந்தையும் நமக்கு அப்படி வலுக் கட்டாயமாக ஊட்டுவதில்லை.

''மகனே, இந்த மருந்து உனக்காக இங்கே வைக்கப்பட்டிருக்கிறது!'' என்று அவள் கூறி விட்டுப் போய் விடுவாள். வயது வந்த மகன், தனக்கு விருப்பமிருந்தால் அந்த மருந்தை எடுத்துச் சாப்பிடலாம். விருப்பம் இல்லா விட்டால், அதைச் சாப்பிடாமலே விட்டு விடலாம். ''நீ ஏன் அதைச் சாப்பிடவில்லை?'' யென்று, தாயானவள் அவனைத் தண்டிக்க வரமாட்டாள்.

இறைவன் என்னும் தாய்க்கு, நாமெல்லாம் கைக்குழந்தையைப் போன்றவர்கள் என்றால், ஜீவன் முக்தர்கள் வயது வந்த மகனைப் போன்றவர்கள். நமக்கும் சரியே, ஜீவன் முக்தனுக்கும் சரியே, பிராரப்தத்தின் பயனை அளிப்பவன் ஈஸ்வரனேயாவன். ஆனால், நமது பிராரப்தத்தின் பயனை நாம் அனுபவித்தே தீரவேண்டும் என்று நம்மைக் கட்டாயப் படுத்துகிற அதே ஈஸ்வரன், ஜீவன் முக்தனை அப்படிக் கட்டாயப்படுத்த மாட்டான்.

பிராரப்தத்தை அனுபவித்தே ஆகவேண்டும் என்ற கட்டாயம் ஞானிக்கு இல்லாதிருப்பதைக் கருத்திற்கொண்டு தான், சஞ்சிதமும் ஆகாமியமும் போலவே ஜீவன் முக்தனுக்குப் பிராரப்தமும் ஒழிந்து போய் விடுகிறது என்றார் கோடக நல்லூர் சுந்தர ஸ்வாமிகள்.

நமக்கும் சரியே, ஜீவன் முக்தனுக்கும் சரியே, பிரார்ரப்த்தை அனுசரித்துத்தான் மரணம் வருகிறது. ஆனால், அப்

படி வருகிற மரணத்திலிருந்து நம்மால் தப்ப முடியாது. ஜீவன் முக்தனுல் தப்பிவிட முடியும்.

“கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின், ஆற்றல் தலைப்பட்டவர்க்கு” என்னும் திருக்குறட்பா இக்கருத்தினையே வலியுறுத்துகிறது.

தன்னுடைய தேகத்தை ஜீவன் முக்தனுல் மரணத்திலிருந்தே காப்பாற்றிக் கொண்டுவிட முடியும் என்றுல், நோய்களிலிருந்துதானு காப்பாற்றிக் கொள்ள முடியாது?

நாமும்தான் உறங்குகிறேம்; ஸ்திதப்ரக்ஞுன ஜீவன் முக்தனும்தான் உறங்குகிறுன். ஆனுல், நம் உறக்கத்துக்கும் அவன் உறக்கத்துக்கும் மிகப் பெரிய வேறுபாடு உண்டு.

உறக்கத்தின்போது நம்முடைய உணர்வும் மூலப்ரகிருதியில்தான் போய் ஒடுங்குகிறது; அவனுடைய உணர்வும் மூலப்ரகிருதியில்தான் போய் ஒடுங்குகிறது. ஆனுல் அவன் விஷயத்தில் அந்த மூலப்ரகிருதியானது தன்னுடைய ஆவரண விக்ஷேப சக்திகளை இழந்ததாய், பற்கள் பிடுங்கப்பட்ட பாம்பைப் போன்றதாய், அவனை எந்த விதத்திலும் பந்தப் படுத்தாததாய் இருக்கிறது. நம் விஷயத்தில் அது தன்னுடைய இருவகை சக்திகளையும் முழுமையாகப் பெற்றதாய், பற்கள் பிடுங்கப்படாத பாம்பைப் போன்றதாய், நம்மை எல்லா விதத்திலும் பந்தப்படுத்துவதாய் இருக்கிறது.

நிர்விகல்ப சமாதியில் முதிர்ச்சி அடைய அடைய, மூலப்ரகிருதியின் ஆவரண விக்ஷேபசக்திகள் நாளுக்கு நாள் மெலிவுற்றுத் தேய்ந்து விடுகின்றன என்பதை நாம் முன்னமேயே கண்டுள்ளோம். அந்த சக்திகள் தேயுமளவுக்கு, சாதகனைப் பொறுத்தமட்டில் எமதர்மனும் சக்தியற்றவனுய் விடுகிறுன் என்பது இங்கே குறிப்பிடத் தக்கது.

ஏனென்ருல், உறக்கமும் மரணமும், கிட்டத்தட்ட ஒரே மாதிரியான நிலைகளேயாகும். அதனுல்தான் "உறங்குவது போலும் சாக்காடு" என்ருர் வள்ளுவர் பெருமான். உறக்கத்தில் போலவே, மரணத்திலும் நம்முடைய உணர்வு மூலப்ரகிருதியில்தான் போய் ஒடுங்குகிறது. எனவே, மூலப்ரகிருதியை வென்றவன், உறக்கத்தையும் மரணத்தையும் ஒருங்கே வென்றவன் ஆகிருன்.

## ஞானியால் பிணிகளை வெல்ல முடியும்

ஸ்திதப்ரக்ஞுன ஜீவன் முக்தனுக்கும் உறக்கம் வரும். அது சரீர தர்மம். ஆனுல், அவன் விரும்பினுல் மட்டுமே உறங்குவான். விரும்பாவிட்டால், அந்த உறக்கத்தை எத்தனை ஆண்டுகளுக்கு வேண்டுமாஞலும் தன்னை அணுகவொட்டாமல் அவனுல் விரட்டியடித்துவிட முடியும். அப்படி விரட்டியடித்து விட்டு அமர்ந்திருக்கும் நிலைதான் நிர்விகல்ப சமாதி எனப்படுவது.

நமகெல்லாம் நிர்விகல்ப சமாதியில் பயிற்சி கிடையாது. ஆகையால் உறக்கத்தையும் நம்மால் விரட்டியடிக்க முடிவதில்லை. நம்மையும் மீறி, உறக்கம் வந்து நம்மை அமுக்கி ஆட்கொண்டு விடுகிறது.

உறக்கத்திலிருந்து தப்ப முடிந்தவனுல்தான் மரணத்திலிருந்தும் தப்பமுடியும். ஜீவன் முக்தன் உறக்கத்திலிருந்து தப்பத் தெரிந்தவன். ஆகையால் மரணத்திலிருந்தும் அவனுக்குத் தப்பித்துக்கொள்ளத் தெரியும். நமக்கு உறக்கத்திலிருந்து தப்பித்துக் கொள்ளத் தெரியாது. எனவே, மரணத்திலிருந்தும் நம்மால் தப்ப முடிவதில்லை.

ஜீவன்முக்தனுக்கும் நம்மைப் போலவே பசிதாகங்கள். ஏற்படுகின்றன. அவற்றைப் போக்கிக்கொள்வதற்காக,

அவனும்தான் சாதத்தை சாப்பிடுகிறான்; தண்ணீரை அருந்துகிறான்.

ஆனால், அவன் நிர்விகல்ப சமாதியில் அமர்ந்து விடுவானாயின், அந்தப் பசியும் தாகமும் அவனை எத்தனை ஆண்டுகளானாலும் எட்டிப் பார்க்கமாட்டா! அந்த நிலையில் அவன் பசிதாகங்களையே வென்றவன் ஆகிறான்.

பசிப்பிணியை வென்றவன், உலகில் உள்ள எல்லாப் பிணிகளையுமே வென்றவன் ஆகிறான்!

அப்படியானால், ஜீவன்முக்தர்களுக்கும் நோய்கள் வருகின்றனவே? எதனால்?

உடலைப் பற்றிய பிராரப்தத்தால் நோய் வருகிறது. அந்த நோயை அவர்கள் விரும்பினால் விலக்கிக் கொண்டு விட முடியும். ஆனால், பெரும்பாலும் அவர்கள் அப்படி விரும்புவதில்லை. அதனால், உலகினர் கண்களுக்கு அவர்கள் நோயால் துன்புறுவது போன்று காட்சியளிக்கிறார்கள்.

அந்த முறையில்தான் பகவான் புத்தர் கொடிய சூலை நோயால் துன்புற்றவர் போன்று காட்சியளித்தார். பகவான் இராம கிருஷ்ண பரமஹம்ஸர் தம் தொண்டையில் வந்த புற்று நோயால் துன்புற்றவர் போன்று காட்சியளித்தார். பகவான் ரமண மஹரிஷிகள் தம் இடது கையில் தோன்றிய புற்று நோயால் துன்புற்றவர் போன்று காட்சியளித்தார்.

அந்த மஹான்கள் விரும்பியிருந்தால், அந்நோய்களும், அவற்றின் விளைவாக நேர்ந்த மரணமும், தம் உடலை அணுகாதவாறு விலக்கிக் கொண்டிருக்கலாம். அதற்குத் தேவையான தபோவலிமை, அவர்களுக்கு நிச்சயமாக உண்டு. அப்படியிருந்தும், தம் உடலுக்கு வந்த அந்த

நோய்களையும் மரணத்தையும், அவர்கள் ஏன் விலக்கிக் கொள்ளாமல் இருந்துவிட்டார்கள்?

அந்த அளவுக்கு அவர்கள் தம் உடலினிடத்தே பற்றற்றவர்களாய் இருந்தார்கள். அதுவே அதன் உண்மையான காரணம்.

அதைப் புரிந்து கொள்ளாமல், "பெரிய பெரிய மஹான்களும்தான் கடைசியில் கொடிய நோய்வாய்ப் பட்டுச் சாகிறார்கள்!" என்று யாரேனும் அலட்சியமாக எண்ணுவார்களானால், அவர்கள் பெருத்த அபசாரத்துக்கு ஆளாவார்கள் என்பதில் ஐயமில்லை. அறியாத்தனத்தினால் யாரும் அப்படி ஆளாகி விடக் கூடாதேயென்பதற்காகத் தான், ஞானிகளின் உடலில் ஏற்படுகிற நோய்களையும் மரணத்தையும் பற்றி, நாம் இவ்வளவு விரிவாக ஆராய நேர்ந்தது.

அருணாசல ஜோதியை
அகத்தே போற்றுவோம்!

கோழி முட்டைக்குள்ளே கரு இருக்கிறது. அந்தக் கருவானது குஞ்சாக வளர்ச்சியடையும் வரையில்தான், அதற்கு முட்டையின் பாதுகாப்புத் தேவைப்படுகிறது. குஞ்சாக வளர்ச்சியடைந்ததும் அது அந்த முட்டையையே உடைத்துக் கொண்டு வெளி வந்துவிடுகிறது. அப்படிவெளி வரும்போது, அதுகாறும் தனக்கு உறைவிடமாக இருந்த முட்டை உடைந்து விட்டதேயென்று, அந்தக் குஞ்சு சிறிதேனும் கவலைப்படுவதில்லை.

அதேபோல, நம்முள்ளேயிருக்கும் பரமாத்மாவைக் கண்டு, அதனோடு நாம் இரண்டறக் கலந்து விடுவதற்காகவே, இந்த மனிதப் பிறவி நமக்கு அளிக்கப்பட்டிருக்

கிறது. அவ்வாறு பிறவியெடுத்ததன் பயனை முழுமையாக அடைந்து விட்டவர்களுக்கு, அதற்கப்புறம் தம்முடைய உடம்பே ஒரு தேவையற்ற பொருளாகத் தோன்றும். ஆகையால், அந்த உடம்புக்குப் பிராரப்தத்தின் காரணமாக ஏதேனும் ஒரு நோய் நொடி வருமானால், அதைத்தடுத்துக் கொள்வதற்கு அவர்கள் ஒரு சிறிதும் முயலுவதில்லை.

இன்னும் சில மஹான்கள் இருக்கிறார்கள். அவர்கள் தாம் பிறவியெடுத்ததன் பயனை முழுமையாக அடைந்து விட்டாலும் கூட, தம் உடலைக்கொண்டு உலகத்திற்குச் செய்ய வேண்டிய பல உபகாரச்செயல்கள் பாக்கியிருக்கின்றன என்று எண்ணுவார்களாயின், அவர்கள் அவ்வாறு எண்ணும்படியாக இந்த மக்கட் சமுதாயத்துக்கு இறைவன் திருவருள் புரிவானாயின், அப்போது அவர்கள் தம் உடலைப் பல நூற்றாண்டுகளுக்கு வேண்டுமானாலும் நோய் நொடியின்றி வைத்துக்கொள்வார்கள். அப்படி வைத்துக் கொண்டவர்களைப் பற்றி நாம் பண்டைய புராண இதிகாசங்களில் மட்டுமல்ல, இன்றும் கூடக் கேள்விப்படுகிறோம். நம்மில் பாக்கியவான்களாயிருப்பவர்கள், அத்தகைய மஹாத்மாக்களைச் சில சமயங்களில் நேரிலும் தரிசிக்க முடிகிறது.

1950'-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 14-'ம் நாளன்று, பகவான் ஸ்ரீரமணப்ரஹ்மம் தம்முடைய புனிதத் திருமேனியை உதறித் தள்ளத் திருவுள்ளம் கொண்டார். அன்று இரவு 8-47 மணிக்கு, விதேஹ கைவல்யம் எனப்படுகிற மஹா நிர்வாணத்தை அவர் எய்தியருளினார். அந்தச் சமயத்தில், ஆகாய வீதியில் அற்புதஜோதியொன்று பாய்ந்து சென்றதை, நாட்டின் பல பாகங்களில் உள்ளோரும் கண்டு வியந்தனர். சுந்தரமூர்த்தி நாயனாரின் ஜோதி திருக்கயிலாயத்தை நோக்கி வந்த போது, அதனை உபமந்யு முனிவர் கண்டு வணங்கிய

(பெரிய புராணச்) செய்தியை நினைவு படுத்துவதாயிருந்தது அந்த தெய்விகக் காட்சி!

மாத்ரு பூதேஸ்வரர் சந்நிதானத்துக்கும், பழைய தரிசன மண்டபத்துக்கும் இடையே, திருமூலரது திருமந்திரத்தில் கூறியுள்ள முறைப்படி அமைக்கப்பட்ட ஒரு சிறிய குகைக்குள்ளே, பகவானுடைய திருமேனி அடக்கம் செய்யப்பட்டது. அதன் மேல் ஒரு "ரமணலிங்க" மூர்த்தியும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

பகவான் தன் உடலோடு இருக்கும்போதே, அந்த உடலை விட்டு விலகியிருந்தவர். அவருடைய நோய்க்கு அறுவைச் சிகிச்சையளித்த டாக்டர்கள் அந்த அதிசய உண்மையைக் கண்ணாரக் கண்டு வியந்தனர். எனவே உடல் மறைந்ததனால், அந்த ஆத்ம சைதன்யம் எங்கேயும் போய் மறைந்துவிடவில்லை. அது எங்கும் இருக்கிறது. எப்போதும் இருக்கிறது. எப்போதும் போலவே இருக்கிறது. அனைத்துலகங்களையும் அழித்து விடக்கூடிய ஒரு மஹாப்ரளயமே வந்தாலும், அந்த அருணாசல ஜோதியை அதனால் அளித்துவிட முடியாது. அது என்றென்றைக்கும் நிரந்தரமாய், சுயம்பிரகாசமாய், நிருபாதிகமாய், நிராலம்பமாய் விளங்கிக் கொண்டிருக்கும்.

பகவான் தம் தேகத்தோடு இருந்த காலத்தில், அவரது அமுதமொழிகளை நேருக்குநேர் கேட்டு அனுபவிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் பலர் உண்டு. அத்தகைய பாக்கியத்தைப் பெறாதவர்களும் படித்து உய்யும்பொருட்டு, பகவானுடைய அருள்மொழிகளை ஸ்ரீரமணாசிரமத்தில் பல புத்தகங்களாக வெளியிட்டிருக்கிறார்கள். அந்தப் புத்தகங்களை நாம் சிரத்தையோடு படித்தால், பகவான் ஸ்ரீரமணப்ரஹ்மமே நமது உள்ளத்தினுள்ளே குருவாக நின்று, அவற்றின் உட்பொருள்களை நமக்கு உணர்த்தியருள்வார் என்பது திண்ணம்.

வசிஷ்டர் வாமதேவர் போன்ற மஹாத்மாக்களின் பரம்பரையில் வந்தவர் ஸ்ரீரமணப்ரஹ்மம். அவரை ஈன் றெடுத்த இந்த பாரததேசம் பாக்கியமுடையது. அவர் காலத்திலேயே வாழக் கொடுத்து வைத்த நாமெல்லாம் பெறும்பேறு பெற்றவர்கள். அந்தப் பேற்றின் பயனை இப் பிறவியிலேயே அடையும் வண்ணம், அல்லும் பகலும் அருணாசலஜோதியை நம் இதயத்தில் வைத்துப் போற்று வோமாக!



## 9. பகவானது உபதேசங்கள்

பகவான் ரமணமஹரிஷி அந்தணர் குலத்தில் பிறந்தவர். ஆனால், அந்த வர்ணத்துக்குரிய சந்தியாவந்தனாதி கர்மாக்களை அவர் கடைப்பிடிக்கவில்லை. அதே போல், அவர் தம் இளம் வயதிலேயே இல்லத்தைத் துறந்தவராயினும், சன்யாச ஆசிரமத்துக்குரிய சின்னங்களைத் தரித்துக் கொள்ளவில்லை. எனவே, வர்ணங்களையும் ஆசிரமங்களையும் கடந்த அதிவர்ணாசிரமியாக அவர் வாழ்ந்து வந்தார்.

பகவான் தமக்குள்ளே அந்தர்யாமியாக விளங்கிக் கொண்டிருந்த இறைவனைத் தவிர, வேறு எவரையும் தமது குருவாகக் கொண்டதில்லை. ஆகையால், குரு சிஷ்ய சம்பிரதாயப்படி, எவரையும் அவர் தமது சீடராகவும் கொண்டதில்லை. எனினும், தம்மை அடுத்த பக்தர்களுக்கெல்லாம், அவர் அவ்வப்போது பல அற்புதமான ஞானோபதேசங்களை அருளியிருக்கிறார். அவர்களது சந்தேகங்களையெல்லாம் தம்முடைய அழகான பதில்களால் தெளிவுபடுத்தியிருக்கிறார். அவற்றையெல்லாம் திரட்டித் தொகுத்து, திருவண்ணாமலை ஸ்ரீரமணாசிரமத்தில் பல புத்தகங்களாக வெளியிட்டிருக்கின்றனர். எனவே, பகவானது உபதேசங்களைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர், அந்தப் புத்தகங்களைப் படித்துப் பயன்பெறுவதே நல்லது.

அப்படிப் படிக்கஇயலாதவர்களுக்காக, அவரது ஞானோபதேசங்களின் சாரம் அனைத்தையும் உள்ளடக்கியவையும்,

கீதாசாரம் என்னும் பெயரால் பகவான் ஸ்ரீரமணமஹரிஷி களாலேயே தொகுத்து அளிக்கப்பட்டவையுமான சில பகவத் கீதைச் செய்யுட்கள், கீழே மொழி பெயர்த்துத் தரப் படுகின்றன. அவற்றையே ஸ்ரீபகவானது நேரடியான உபதேசங்களாக பாவித்து, அன்பர்கள் ஆத்மீக சாதனைகளில் தீவிரமாக ஈடுபடுவார்களாக!

## கீதாசாரம்

1) ஸஞ்ஜயர் சொன்னார்:

இரக்கத்தால் மனம் உருகியவனும், கண்ணீர் ததும்பும் விழிகளையுடையவனும், துக்கிப்பவனுமான அந்த அர்ஜுனனை நோக்கி, பகவான் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா கீழ்க்கண்டவாறு கூறினார்.

2) ஸ்ரீ பகவான் கூறியது:

அர்ஜுனா! இந்த உடலானது க்ஷேத்ரம் என்று கூறப் படுகிறது. எவன் இந்த க்ஷேத்ரத்தை அறிகின்றானோ, அவனை ஞானிகள் க்ஷேத்ரஜ்ஞன் என்று கூறுவார்கள்.

3) அர்ஜுனா! எல்லா க்ஷேத்ரங்களிலும் (அதாவது, உடல்களிலும்) விளங்குகிற க்ஷேத்ரஜ்ஞனாகவும் (அதாவது, ஜீவாத்மாவாகவும்) நானே இருக்கிறேன் என்பதை நீ அறிந்து கொள்வாயாக! க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் பற்றித் தெரிந்து கொள்வதாகிய ஞானமே, உண்மையான ஞானம் என்பது என் கருத்து.

4) அர்ஜுனா! எல்லாப் பிராணிகளின் இதயத்திலும் உள்ள ஆத்மா நானே! அந்தப் பிராணிகளின் ஆதியும் நானே; நடுவும் நானே; முடிவும் நானே!

*

5) பிறந்தவன் இறப்பது உறுதி அல்லவா? அதேபோல் இறந்தவனும் பிறப்பது உறுதியே! (இவ்விரண்டையும் தவிர்க்க முடியாது. ஆகையால்,) தவிர்க்க முடியாத இந்த விஷயத்துக்காக, நீ துக்கம் அடைவது சரியல்ல.

6) ஆத்மாவானது ஒருபோதும் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. அது ஒரு காலத்தில் இல்லாமலிருந்து, மறுபடியும் பிறிதொரு காலத்தில் உண்டாவதும் இல்லை. அது பிறப்பற்றது. என்றும் உள்ளது. அழிவில்லாதது. பழமையானது. சரீரம் (கொல்லப்படலாம். ஆனால் அது அப்படிக்) கொல்லப்படும்போது (கூட), ஆத்மா கொல்லப் படுவதில்லை.

7) ஆத்மாவை (வாளால்) வெட்டிப் பிளக்க முடியாது. (தீயால்) எரிக்க முடியாது. (நீரால்) நனைக்க முடியாது. (காற்றால்) உலர்த்த முடியாது. அது நித்தியமானது. எங்கும் இருப்பது. நிலை பெற்றது. அசைவில்லாதது. என்றைக்கும் உள்ளது.

8) இவ்வுலகனைத்திலும் ஆத்மாவே நிறைந்துள்ளது. அந்த ஆத்மாவானது ஒரு நாளும் அழியப் போவதில்லையென்பதை அறிவாயாக! எந்தக் காலத்திலும் எவ்வித மாறுதலையுமே அடையாததாய் இருக்கிற இந்த ஆத்மாவை அழித்து விடக் கூடிய சாமர்த்தியசாலி, எவனுமே இலன்.

9) இல்லாத ஒரு பொருள், உள்ளதாக ஆகிவிடாது. (அதே போல்) உள்ள ஒரு பொருளும், இல்லாததாய் ஆகிவிடாது. (இல்லாதது போலவும் உள்ளது போலவும் காணப்படுகிற) இவ்விரு வகைப் பொருள்களையும் பற்றிய முடிவான உண்மையை, தத்துவ ஞானிகளே அறிய வல்லவர் ஆவர்.

10) (பஞ்ச பூதங்களில்ஒன்ருன) ஆகாசமானது (மற்ற எல்லாப் பூதங்களைக் காட்டிலும் மிகவும்) நுண்மையானதாய் இருப்பதால், அது எங்கும் (எல்லாப் பொருள்களிலும்) நிறைந்திருந்த போதிலும், (அப்பொருள்களிலுள்ள களங்கங்களின் காரணமாக) ஆகாசம் களங்கம் அடைவதில்லை. அதே போல, ஆத்மாவானது உடலில் எங்கும் நிறைந்திருந்த போதிலும் (அவ்வுடலில் உள்ள களங்கங்களின் காரணமாகத் தான் களங்கம் அடைவதில்லை.

11) ஜீவர்கள் (தம் அஞ்ஞானம் ஒழியப் பெற்றதன் பயனுக) எந்த உயர்நிலைக்குச் சென்று விட்டால் பிறகு அங்கிருந்து திரும்புவதில்லையோ, அதுவே என்னுடைய பரமபதம். அதனை சூர்யனே, சந்திரனே, அக்கினியோ தன்னுடைய ஒளியால் விளக்குவதில்லை. (அதாவது, அந்தப் பரமபதம் வேறு எதனுலும் விளக்கப்படாததாய், தானே சுயம்பிரகாசமாய் விளங்குவது.)

12) அக்ஷரம் (அதாவது, அழிவில்லாதது) என்று கூறப்பட்ட அவ்யக்தம் (அதாவது, வெளிப்படையாக விளங்காதது) எதுவோ, அதனையே (ஜீவர்கள் அடையத் தகுந்த) உயர்ந்த கதியெனக் கூறுவார்கள். அதை அடைந்தவர்கள் திரும்பி வருவதில்லை. அதுவே என்னுடைய பரமபதம்.

13) செருக்கும் மோஹமும் இல்லாதவர்களும், பாசத்தை வென்றவர்களும், ஆத்ம நிஷ்டையிலிருப்பவர்களும், ஆசைகளை விட்டவர்களும், இன்பத்தில் விருப்பு— துன்பத்தில் வெறுப்பு இவ்விரண்டினின்றும் விடுபட்டவர்களும், அஞ்ஞானம் ஒழியப் பெற்றவர்களும் (ஆகிய ஜீவன் முக்தர்கள்), என்றும் அழிவில்லாத அந்தப் (பரமபதம் என்னும்) பதவியை அடைகிருர்கள்.

14) எவன் சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து விட்டுத் தன் ஆசைகளுக்கே அடிமையாகி வாழ்க்கை நடத்துகிறானோ, அவன் சித்தியை அடைவதில்லை. சுகத்தை அடைவதில்லை. மேலான கதியையும் அடைவதில்லை.

15) பரமேஸ்வரனை எல்லாப் பொருள்களிலும் ஏற்றத் தாழ்வின்றி உறைபவனாகவும், அப்பொருள்கள் அழியும் போதும் அழியாதவனாகவும் எவன் பார்க்கிறானோ, அவனே (உண்மையான) பார்ப்பான் ஆவான்!

16) எதிரிகளை எரிப்பவனே! அர்ஜுனா! என்னை அடையவேண்டும் என்ற ஒரு குறிக்கோளைத் தவிர வேறு எந்த ஒரு பலனையும் எதிர்பாராத பக்தி ஒன்றினாலேயே, இவ்வாறு என்னை அறிவதற்கும், காண்பதற்கும், என்னுடைய தத்துவ ஸ்வரூபத்தில் கலப்பதற்கும் ஒருவன் உரியவன் ஆகின்றான்.

17) அர்ஜுனா! ஒவ்வொரு மனிதனுடைய சிரத்தையும், அவனவனது அடிப்படை இயல்புக்குத் தக்கபடியே அமைந்திருக்கும். சிரத்தையே ஜீவனுடைய வடிவம் (என்று சொல்ல வேண்டும்). (எனவே,) எவன் எவ்வகையான பொருளில் சிரத்தையுடையவனாக இருக்கிறானோ, அவன் அவ்வகையான மனிதன் ஆவன்!

18) ஞானத்தை அடைவதிலேயே எந்நேரமும் நாட்டமுடையவனாய் இருப்பவனும், இந்திரியங்களை நன்கு அடக்கியவனும் ஆகிய சிரத்தாவான் (அதாவது, சிரத்தை உடையவன்), ஞானத்தை அடைகிறான். ஞானத்தை அடைந்து, சாந்தியென்கிற பரமபதத்தை விரைவில் அடைகிறான்.

19) நிலைபெற்ற உள்ளமுடையவர்களாய் என்னைப் பிரியத்தோடு வழிபடுபவர்களுக்கு, அவர்கள் என்னை அடைவதற்கு வழிகாட்டுவதாகிய புத்தியோகத்தை நான் அருளுகிறேன்.

20) அவர்கள்பால் நான் அருள்கூர்ந்து, அவர்களது உள்ளத்திலே நிலைபெற்று ஒளிவிசுகிற ஞானதீபத்தின் வாயிலாக, அஞ்ஞானத்தால் உண்டான இருளை நாசம் செய்கிறேன்.

21) ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் அழிவுறப் பெற்றவர்களுக்கு, அந்த ஆத்மஞானமே சூரியனைப்போல் (உள்ளிருக்கும்) அந்தப் பரம் பொருளை விளங்கச் செய்கிறது.

22) இந்திரியங்களே மேலானவையென்று கூறுவர். அந்த இந்திரியங்களினும் மேலானது மனம். மனத்தினும் மேலானது புத்தி. புத்திக்கும் அப்பாற்பட்டது ஆத்மா.

23) தோள் வலி படைத்த அர்ஜுனு! இவ்வாறு புத்திக்கும் அப்பாற்பட்ட ஆத்மாவை அறிந்து, நிச்சயரூபமான புத்தியால் சஞ்சலரூபமான மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கி நிலைநிறுத்தி, வெல்லுதற்கரிய ஆசையென்னும் பகையை நாசம் செய்வாயாக!

24) அர்ஜுனு! மண்டியெரிகின்ற நெருப்பானது விறகை நாசம் செய்வது போல, ஞானம் என்ற நெருப்பானது (மனிதன் செய்கின்ற) எல்லாக் கர்மாக்களையும் (அதாவது, கர்மாக்களினுல் தோற்றுவிக்கப்படுகிற புண்ணிய வாசனைகளையும், பாபவாசனைகளையும் ஒருங்கே) நாசம் செய்து விடும்.

25) எவனுடைய செயல்கள் அனைத்தும் ஆசையினாலும் (''நான் இதைச் செய்வேன்!'' என்ற) தன்முனைப்பாலும் தூண்டப்படாதனவாய் இருக்கின்றனவோ, அவனுடைய வினைகள் (அதாவது, புண்ணிய பாவங்கள்) ஞானாக்கினியால் பொசுக்கப்பட்டு விடுகின்றன. புத்திமான்கள் அவனையே பண்டிதன் என்று கூறுவார்கள்!

26) ஆசையிலிருந்தும் கோபத்திலிருந்தும் விடுபட்டவர்களும், அடங்கிய சித்தம் உடையவர்களும், ஆத்மானுபூதி உடையவர்களுமான துறவிகள், இகத்திலும் பரத்திலும் நிர்குணப்ரஹ்ம ஸ்வரூபமாகவே விளங்குகிறார்கள்.

27) உறுதிப்பாடுள்ள புத்தியின் துணைகொண்டு, மெல்ல மெல்ல சாந்தியை அடைய வேண்டும். மனத்தை ஆத்மாவில் நிலைபெறச் செய்து, எந்த ஓர் எண்ணமும் இல்லாமல் சும்மா இருக்க வேண்டும்.

28) சஞ்சலம் அடைவதும், ஒரு நிலையில் நில்லாததுமான மனம், எந்த எந்தப் பொருளை நோக்கி வெளியே ஓடுகிறதோ, அந்த அந்தப் பொருளிலிருந்து அதைத் திருப்பி இழுத்து, ஆத்மாவிலேயே லயப்படுத்த வேண்டும்.

29) இந்திரியங்களையும் மனத்தையும் புத்தியையும் தன் வசப்படுத்தியவனாய், எப்போதும் மோக்ஷத்திலேயே நாட்டம் உள்ளவனாய், ஆசை பயம் கோபம் இவற்றை அறவே ஒழித்தவனாய், மனோமௌனத்தில் இடையறாத முயற்சியுடையவனாய் இருப்பவன் எவனோ, அவன் சதா காலமும் விமுக்தனாகவே விளங்குகிறான்.

30) யோகத்தில் நிலைபெற்ற உள்ளமுடையவன் எங்கும் சமநோக்கு உள்ளவனாய் (அதாவது, பொருள்களுக்

குள்ளே அல்லது நிலைகளுக்குள்ளே ஏற்றத்தாழ்வுகளைக் கற்பிக்காமல், எல்லாவற்றையும் சமமாகக் கருதுபவனாய்), எல்லாப் பொருள்களிலும் ஆத்மாவைக் காண்பான். (அதே போல்,) எல்லாப் பொருள்களையும் ஆத்மாவில் காண்பான்!

31) என்னைத் தமக்கு அன்னியமில்லாத பொருளாக (அதாவது, என்னையே தம்முடைய ஆத்மாவாகத்) தியானித்து, என்னைப் பரிவுடன் உபாசனை செய்து, என்னிலேயே எப்போதும் ஒன்றி நிற்பவர்களின் யோக க்ஷேமங்களுக்கான பொறுப்பை, நான் ஏற்றுக் கொள்கிறேன்.

32) (துன்புற்றோன், ஞானத்தைத் தேடுபவன், செல்வத்தை நாடுபவன், ஞானி—இந்நால்வகையினரும் என்னை வழிபடுகின்றார்கள். அப்படி வழிபடுகிற) அந்தப் புண்ணியவான்களுக்குள்ளே, என்றும் என்னிடத்தில் ஒன்றி நிற்பவனும், பரம்பொருள் ஒன்றினிடத்திலேயே எப்போதும் பிரியத்தோடு தன் சித்தத்தைச் செலுத்திக் கொண்டிருப்பவனுமாகிய ஞானியே சிறந்தவன் ஆவான். நிச்சயமாக நான் ஞானிகளுக்கு மிகமிகப் பிரியமானவன். (அவ்வாறே) ஞானிகளும் எனக்குப் பிரியமானவர்கள்!

33) பல (கோடி) பிறவிகளின் முடிவில், (உலகில் காணப்படுகிற) எல்லாமும் வாசுதேவனின் வடிவங்களே என்று உணர்ந்தவனாய், ஞானி என்னை வந்து அடைகின்றான். அப்படி அடைபவனே மஹாத்மா! (உலகில்) அத்தகைய மஹாத்மாக்களைக் காண்பது மிகவும் அரிது.

34) அர்ஜுனா! எவன் ஒருவன் தன் மனத்தில் உள்ள ஆசைகளையெல்லாம் ஒழித்துவிட்டு, ஆத்மாவினிடத்தி

லேயே நிலைபெற்றவனாய், அவ்வாறு நிலைபெற்றிருப்பதி லேயே மகிழ்ச்சியுறுபவனாய் இருக்கிறானோ, அவன் ஸ்திதப் பிரஜ்ஞன் என்று சொல்லப்படுகிறான்.

35) எவன் தன் ஆசைகள் அனைத்தையும் விட்ட வனாய், தனக்கு என எதையும் வேண்டாதவனாய், "நான்" என்ற முனைப்பும், "என்னுடையது" என்ற பற்றும் அற்றவனாய் வாழ்ந்து வருகிறானோ, அவன் சாந்தியை அடைகிறான்.

36) எவனால் மற்றவர்கள் துன்பத்துக்கு ஆளாவ தில்லையோ; (அதேபோல்) எவன் மற்றவர்களால் துன் பத்துக்கு ஆளாவதில்லையோ; உற்சாகம், கோபம், பயம், மனக்கலக்கம் இவற்றினின்று எவன் விடுபட்டவனாய் இருக்கிறானோ; அவனே எனக்குப் பிரியமானவன்.

37) எவன் மானத்தையும் அவமானத்தையும் சம மாகக் கருதுகிறானோ; நண்பனிடமும் பகைவனிடமும் ஒரே மாதிரியாக (அதாவது, விருப்பு வெறுப்பின்றி) நடந்துகொள்கிறானோ; (ஆசையால் உந்தப்பட்டு, "நான் அதைச் செய்வேன்! இதைச் செய்வேன்" என்ற தன் முனைப்போடு) காரியங்களைச் செய்யத் தொடங்குகிற மனப்பான்மையை எவன் தியாகம் செய்தவனோ; அவன் குணாதீதன் (அதாவது, சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவன்) என்று கூறப் படுகிறான்.

38) ஆத்மாவில் நிலைபெற்றிருப்பதிலேயே பிரிய முடையவனாகவும், அதிலேயே திருப்தியடைந்தவனாகவும், அதிலேயே மகிழ்ச்சியுறுபவனாகவும் எவன் இருக்கிறானோ,

அவன் செய்ய வேண்டிய கடமையோ காரியமோ வேறு எதுவும் கிடையாது!

39) அவனுக்கு, இவ்வுலகில் ஒரு கடமையை அல்லது காரியத்தைச் செய்வதனால் அடையக்கூடிய இலாபம் எதுவும் கிடையாது. செய்யாமல் விட்டுவிடுவதால் ஏற்படக்கூடிய நஷ்டமும் கிடையாது. அவன் ஒரு பயனைக் கருதி நாடத் தகுந்த எந்த ஒரு பொருளுமே உலகத்தில் கிடையாது.

40) தன்னுடைய முயற்சி யில்லாமலே எது தன்னைத் தேடி வருகிறதோ அதைக்கொண்டு சந்தோஷம் அடைபவனும், (சுகத்தில் விருப்பு—துக்கத்தில் வெறுப்பு என்னும்) இரண்டையும் கடந்தவனும் (அதாவது, நடப்பது நடக்கட்டும் என்று அமைதியோடிருப்பவனும்), பொறாமை என்பதே இல்லாதவனும், வெற்றியையும் தோல்வியையும் ஒரே மாதிரியாக ஏற்றுக்கொள்பவனும் ஆகிய ஒருவன், (உலகில் எந்தக்) காரியத்தைச் செய்தாலும், அதனால் விளையக்கூடிய கர்மபந்தங்களுக்கு (அதாவது, புண்ணிய பாபங்களுக்கு) ஆளாவதில்லை.

41) அர்ஜுனா! (தேகமாகிய) யந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்ட (பொம்மைகள் போன்ற) எல்லாப் பிராணிகளையும் தன்னுடைய மாயா சக்தியினால் ஆட்டிவைத்துக் கொண்டிருக்கும் ஈசுவரன், அந்தப் பிராணிகளுடைய இதயத்தினுள்ளேயே அமர்ந்திருக்கிறான்.

42) அர்ஜுனா! உன்னுடைய (மனோ வாக்குக் காயங்களாகிய) அனைத்தினாலும் நீ அந்த ஈசுவரனையே சரண் அடைந்து, அவனுடைய திருவருளாலே மேலான சாந்தி

யையும், என்றும் நிலையான உயர் பதவியையும் அடைவாயாக!

* * * *

இந்த நாற்பத்திரண்டு சுலோகங்களிலே பகவத்கீதையின் சாரம் அனைத்தும் அடங்கியிருப்பதாக, பகவான் ஸ்ரீரமணமஹரிஷிகளே அருளியிருக்கிறார்.

எனவே இவற்றை எவனொருவன் சிரத்தையோடு பயிலுகிறானோ. அவன் பகவத்கீதை முழுவதையும் படித்துணர்வதால் அடையத் தகுந்த மேலான ஞானத்தை எளிதில் அடைந்து விடுகிறான்!

சுபம்.

Registered No. M 8206





Wrapper Printed at Sremati Printers, Madras-2